உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௩௦] பிரஜோத்பத்தி ஹு கார்த்திகைமீ [பகுதி-௧.

Vol. XXX. November-December-1931. No. 1.


## தமிழின்பழமை.

நிலவுலகில் தோன்றிய செவியறிவுடைய உயிர்ப்பொருள்களெல்லாம் தம் உள்ளத்தில் நிகழும் விருப்பு வெறுப்பு முதலியவற்றைத் தம்மினத்துக்கு ஒலிக்குறிப்பால் வெளியிடுகின்றன. அவ்வொலிக்குறிப்பே அவற்றிற்குப் பேச்சாக அமைந்துள்ளது.

காக்கைக்குச் சோறிடும்போது முதலில் வந்த ஒரு காக்கை தன் இனத்தை ஒலிக்குறிப்பால் அழைத்துக்கொண்டு அவற்றுடன் கூடியிருந்து உண்கின்றது. வைகறையாமத்தில் கரிக்குருவிகள் ஒன்றோடொன்று கனிந்துபேசி மகிழ்கின்றன. இவற்றைக் 'காக்கை கரவா கரைந்துண்ணும்' என்று திருவள்ளுவனாரும், 'கீசுகீசென்றெங்கும் *ஆனைச்சாத்தங்கலந்து பேசினபேச்சரவங்கேட்டிலையோ' என்று கோதைப்பிராட்டியாரும் கூறியுள்ளார்கள்.

இவ்வாறே அணில் கிளி முதலிய செவியறிவுடைய உயிர்ப்…ருள்களெல்லாம் தமக்கு இயற்கையாயமைந்த ஒலிக்குறிப்பினால் தம்…னத்தொடு பேசுகின்றன.

அவ்வளவின்றி எருமை, பசு, கன்று முதலியன தமக்கு இரை…யும் தண்ணீரேனும் வேண்டியபொழுது அக்கருத்தை மெய்ப்பாடு

* ஆனைச்சாத்தம் - கரிக்குருவி.

அறியுமாறு அவற்றின் இயற்கையொலிக்குறிப்பால் 'மா' என்று அழைக்கின்றன. காவலை மேற்கொண்ட நாய்கள் வேற்றுள் வரக்கண்டால் அவர் அகன்றுசெல்லுமாறு தம் சினக்குறிப்பை ஒலிக்குறிப்பாற்காட்டி விரட்டுகின்றன. இவ்வொலிக்குறிப்புக்களெல்லாம் அவ்விலங்கினங்களுக்கு வேண்டியஅளவு தம்கருத்தை வெளியிடுதற்கு இயற்கையானமைந்த பேச்சென்றே கொள்ளத்தகும்.

இவ் வியற்கைப்பேச்சுக்களெல்லாம் அவ்விலங்கினங்களால் உண்டாக்கிக்கொள்ளப்பட்டனவல்ல; அநாதியாயுள்ளன. இவ்வுலகமுழுதும் ஊழிகாலத்தில் அழிந்துபோய் மறுபடைப்புத் தொடங்கிய காலத்தில் அவை தோன்றுமாயின் தத்தமக்குரிய ஒலிக்குறிப்பாகிய பேச்சுக்களையே இயற்கையாய்ப் பேசுவனவாம். ஆகையால் அப் பேச்சுக்கள் அவற்றிற்கு என்றும் ஒருபடியேயுள்ளனவாம். அவ்வாறு மக்களுக்கும் தம்கருத்தைத் தம்மினத்துக்கு வெளிப்படுத்தற்குரிய இயற்கையான பாஷை ஒன்று வேண்டியஅளவில் அநாதியாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

விலங்கினங்கள் செயற்கையறிவுபெறாது இயற்கையறிவொன்றே யுடையனவாதலால் அவற்றின் பாஷைகள் வேற்றுருவடையாதொரு படியா யிருக்கின்றன.

மக்களுக்கு இயற்கையறிவோடு செயற்கையறிவுமுண்மையால் இவர்களுக்குரிய இயற்கைமொழிகளெல்லாம் செயற்கையால் உருமாறிக் காலதேசவேறுபாட்டால் வெவ்வேறு பாஷைகளாகின்றன. அதனால் இவை இயற்கைமொழி என்றும் இவை செயற்கைமொழி என்றும் வேறு பிரித்தறிதல் மிகவும் அரிதாகிவிட்டது.

ஆயினும் ஒன்றையொன்றறியாத பலவேறு பாஷைகளிலும் சொற்பொருள்களொத்துமைப்பட்ட மொழிகளும், தாதுக்களு மியற்கைமொழியென்று கொள்ளத்தகும். அவை பெரும்பாலும் ஓரெழுத்தொருமொழியும் ஈரெழுத்தொருமொழியுமாயுள்ள இயற்பெயர்களும், மாபுப்பெயர்க

ளும், உரிச்சொற்களாகிய வினைப்பகுதிகளும், பண்புப்பகுதிகளும் பிறவு மாம்.

தொல்காப்பியனார், இயற்கைமொழிகளை 'ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழி' என்ற சூத்திரத்தில் ஒருமொழியென்றுகூறிச் செயற்கைமொழிகளை 'இரண்டிறந்திசைக்குந் தொடர்மொழி' என்றார். இதனால் ஓரெழுத்தாலேனும் ஈரெழுத்தாலேனும் இயல்பான் அமையும் மொழிகளை ஒருமொழி என்றமையால் அவை இயற்கைமொழியென்றும், தொடர்மொழி என்றது ஒருமொழியோடு வேறுமொழிதொடர்ந்தனவே யாதலால் அவை மக்களிச்சையாற் கூட்டிப்புணர்க்கும் செயற்கைமொழி யென்றும் கொள்ளத்தரும்.

நன்னூலாரும் பெயர்களை மரபுபற்றியபெயரென்றும் ஆக்கம்பற் றியபெயரென்றும் இருகூறுபடுப்பர். அவற்றுள் மரபுபற்றியபெயர் களை ஆக்கத்தின் வேறாகக்கூறினமையால் அம்மரபுப்பெயர்கள் மக்களால் ஆக்கிக்கொள்ளப்பட்டனவல்லவென்பதும், அவை தொன்றுதொட்டு ஒருபடியாக வழங்கப்பட்டுவரும் இயற்கைமொழி என்பதும் அவர்க்கு உடம்பாடாகும்.

இயற்கைமொழிகளே இயற்சொல் என்றும், செயற்கைமொழிகளே திரிசொல் என்றும் முற்காலத்து வழங்கப்பட்டுள்ளன. (அப்பெயர் பிற்காலத்து வேறுபொருள் பெற்றன.) ஆக்கப்படாது தொன்று தொட்டுவழங்கிவரும் மரபுப்பெயர்களுள் ஒருசில இடுகுறிப்பெயரும் வேறுசில காரணப்பெயரும் உண்டென்பர் நன்னூலார். மரபினுள், இடுகுறி யென்றது காரணந்தோன்றாத பெயர்கள் என்றும், காரணக் குறியென்றது காரணங்கருதி மக்களால் ஆக்கப்படாது இயல்பானே காரணம் அமைந்துகிடக்கும்பெயர்கள் என்றும் கருதவேண்டும்.

இதுகாறுங்கூறியவாற்றாற் செவிப்பறிவுடைய உயிர்ப்பொருள்களுக் கெல்லாம் இயற்கையொலிக்குறிப்பு அநாதியாயிருத்தலால் அம்முறை யானே மக்களுக்கும், தமக்குரிய இயற்கையொலிக்குறிப்பால் தம்

கருத்தை இனத்திற்கு உணர்த்தற்கு உரிய இயற்கைமொழி அநாதியாக மக்கள் தோன்றியகாலந்தொட்டு வழங்கப்பட்டிருக்கவேண்டுமென்பது பெறப்பட்டது.

இனி அவ்வியற்கைமொழி வெளிப்படும் காலமும் இடமும் ஆராய்வாம். மக்கள் தோன்றியகாலத்தே அவர்க்குரிய இயற்கைமொழியும் அவரிடம் வெளிப்படத்தொடங்குவது இயல்பாகும்; ஆயினும் உயிர்ப்பொருள்களுக்குவேண்டும் இயற்கையுறுப்புக்களெல்லாம் அவர் பிறக்கும்பொழுதே உடன்தோன்றிவிடவேண்டுமென்ற நியமமில்லை. விலங்கினங்களுக்குக் கொம்புகள் நாளடைவில் வெளிவருகின்றன. மக்களுக்குப் பற்கள் நாளடைவில் தோன்றி அவை விழுந்து பின்பு வேறுபற்களும் முளைக்கின்றன. அவ்வாறே இயற்கையான சொற்களும் நாளடைவில் தோன்றி அவை வீழ்ந்து பின் வேறுசொற்களும் தோன்றலாம். படைப்புக்காலத்திலும் சில புலப்படலாம்.

இவ்வுலகின் படைப்பைப்பற்றிப் பரிபாடல் பின்வருமாறு கூறுகிறது:—

"கருவளர்வானத்து இசையிற்றோன்றி
உருவறிவாராஒன்றன்ஊழியும்
முந்துவளிகிளர்ந்தவூழூழியும்
செந்தீச்சுடரியவூழியும்பனியொடு
தண்பெயல்தலைஇயவூழியுமவையிற்
றுண்முறைவெள்ளமூழ்கியார்தருபு
மீண்டும்பீடுயர்பீண்டியவற்றிற்கும்
உள்ளீடாகியவிருநிலத்தூழியும்"

என்ற அடிகளால், இவ்வுலகதோன்றுதற்குக் கருவாயுள்ள அணுக்கள் ஒலியுடன்கூடிய ஆகாயத்தில் ஒருழிகாலம்வளர்ந்துகொண்டிருந்து பின்பு காற்றுவடிவமாகி ஒருழிகாலமிருந்ததென்றும், பின்பு அது தீத்திரளாகிமாறி ஒருழிகாலமிருந்ததென்றும், பின்பு அது நீர்த்திரளாகிமாறி ஒருழிகாலமிருந்ததென்றும், பின்பு அந்நீர்த்திரளினின்றும் இவ்

வுலகு பார்த்திரளாய்த்தோன்றிற்றென்றும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு உலகத்தோற்றமுரைக்கும் கொள்கையை ஆங்கிலகலாநிபுணர்களும் ஆதரிக்கின்றனர் என்று தெரிகின்றது.

இவ்வாறுதோன்றும் உலகினிடையே மக்கள்தோன்றிய இடம் யாதாயிருக்குமென்றாராய்வாம். புறப்பொருள்வெண்பாமாலையுள், 'குடிநிலை' யென்னும் வெட்சித்திணைத்துறைக்கு உதாரணங்காட்டிய செய்யுள் ஒன்றுள்ளது; அது.—

"பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி"

என்பதாம்.

இதன்பொருள்:—"பொய்ம்மைநீங்க நாள்தோறும் கீர்த்தியையுண்டாக்குதல் என்ன அதிசயமாம்! பூமியைமறைத்த தெளிந்துகறங்கும் உகாந்தவெள்ளம் விட்டுநீங்க முற்பட மலைதோன்றிப் பூமிதோன்றாத அளவிலே வாளுடனே எல்லாரினும் முற்பட மலையிடத்திலேதோன்றிப் பழையதாகியகுடி" என்பது.

இதனால் உகாந்தவெள்ளத்தில் பூமிமுழுதும் முழுகிக்கிடந்து நெடுங்காலமானபிறகு சமதரையான நிலப்பரப்புத்தோன்றுவதற்கு முன்னே, அந்நிலப்பரப்புக்களினின்றும் மிகவும் உயர்ந்துவிளங்கும் மலைகளே அந் நீர்ப்பரப்பின் மேலே தோன்றத்தொடங்குவன. அவ்வாறு தோன்றிய மலையிற் பிறந்த தமிழக்குடிகளே மற்ற மொழிபயிலும் குடிகளுக்கு முற்பட்டவர் என்று பெறப்படுகிறது.

அத்தகைய மலைகள் இமயமலைத்தொடரும் சையமலைத்தொடருமாம். இமயமலைச்சிகரப்பகுதிகள் நெடுங்காலம் பெருங்கடலில் மூழ்கிக்கிடந்திருக்கவேண்டுமென்று பிரத்தியக்ஷசோதனையால், பூமிசோதனசாஸ்திர நிபுணர்களும் அங்கீகரிக்கிறார்கள் என்றுதெரிகிறது. ஆயினும் மது பனி

மிகுதியால் உயிர்ப்பொருள் முதன்முதற்றோன்றிவளர்தற்குரிய இடந்தரு தல் அரிதேயாம். பொதியம் என்னும் சையமலைத்தொடர் அத்துணை பனிமிகுதியின்மையால் உயிர்ப்பொருள்தோன்றி வளர்தற்குரியதே. ஆதலால் பெருங்கடலிடையே சையமலை தோன்றியகாலத்து அம் மலைத் தொடர்களில் மக்களுணவுக்குரிய காய் கனி கிழங்குவகைகளையுதவும் தாவரவர்க்கங்களும், ஊர்வன பறப்பன நடப்பன நீர்வாழ்வனவாகிய விலங் கினங்களும் தோன்றியதுணையே, மக்களும் தோன்றியிருக்கவேண்டு மென்று தோன்றுகின்றது. அவர் அக்காலத்திற் பேசிய மொழிகளை ஆராய்தற்குரிய மிகப் பழமையான நூல்கள் இக்காலத்தில் ஒன்றுமில்லை. ஆயினும் இக்காலத்திலுள்ள தமிழ்நூல்களிலெல்லாம் மிகப் பழமை வாய்ந்தது தொல்காப்பியமொன்றே.

அதன்கண் தரைவாழ்க்கையறியாத மலைவாழ்க்கையுடையவர்க ளாற் குறிசெய்து வழங்குதற்கு இன்றியமையாத மரப்பெயர்களும், படைப்புக்காலந்தொட்டு வழங்குதற்கு இன்றியமையாத மாபுப் பெயர்களும், திசைப்பெயர்களும், எண்ணுப்பெயர்களும், பிறவும் ஆராயப்பட்டுள்ளன. உயிர்ப்பொருட்பெயர் பலவும் மாபியலுள் ஆராயப் பட்டுள்ளன.

இவற்றுள் மரப்பெயர்ப்பொருள்கள் பெரும்பான்மையும் மலையகத் துள்ளனவே. அவை:—யா, பிடா, தளா, விளா, பலா, அஞா, நுஞா, ஒடு, சே, மா, விசை, ஞெமை, நமை, கடு, ஆண், அரை, இல்லம், விசை, எகின், ஆர், வெதிர், சார், பீர், பூல், வேல், குமிழ், வழை என்பனவும் பிறவுமாம்.

இம் மரப்பெயர்கள் அவ்வவ்வீற்றெழுத்துக்குரிய பொதுவிதிபெற் றுப்புணராது சிறப்புவிதிபெற்றுப் புணர்கின்றன. மிகவும் பழையகால வழக்குக்கு இன்றியமையாத தன்மை முன்னிலை படர்க்கைப்பெயர்களும் திசைப்பெயர்களும் எண்ணுப்பெயர்களும் தத்தம் ஈற்றெழுத்துக்குரிய பொதுவிதியுளடங்காத சிறப்புவிதிபெற்றுப் புணர்கின்றன. அவ்வாறு சிறப்புவிதி பெற்றுப் புணரும் மரப்பெயர்களும் படைப்புக்காலச்சொற்க

ளென்றறியத்தகும். அச்சொற்பொருள் பலவும் மலையகத்திருத்தலால் அச்சொற்கள் பிறந்த இடம் மலையகமாமென்ப தொருதலை. இக்கருத் துட்கொண்டு தமிழ்மொழிவணக்கம் கூறிய ஒரு புலவர்பெருந்தகை, தமிழ்த்தெய்வத்துக்குப் பிறப்பிடம் பொருப்பு என்பது புலப்பட—

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வையை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்."

என்று தமிழ்மொழியின்சரித்திர முரைத்திருக்கிறார். அணியிலக்கண முரைத்த தண்டியாசிரியரும்,

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திடர்கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

என்றார். இதனானும் தமிழ் ஓங்கலிடை (மலையகத்தே) தோன்றிய தென்று சொல்லப்பட்டிருக்கிறது.

தமிழ்மொழிகளுள் ஒரு சில மரபுபற்றிவருவனவென்றும், வேறு சில ஆக்கம்பற்றிவருவனவென்றும் முன்னமே சொல்லப்பட்டன. ஆக்கம்பற்றிய சொற்களெல்லாம் மக்களாலாக்கிக்கொள்ளப்பட்டனவாதலால் அவற்றின் வேறுயுள்ளனவெல்லாம் மக்களாலாக்கப்படாமல் இயல்பானே அமைந்தனவாம். இயல்பானமைந்தமையால் அவை யியற்சொல்லென்று வழங்கப்படுகின்றன. இயற்சொல்லுள்ளும் காரணம்பற்றியமொழிகள் பல காணப்படுகின்றன. அவை அக்காரணங்களையறிந்த மக்களா லாக்கிக் கொள்ளப்பெறாமல் இயல்பானே அமைந்திருத்தல் எவ்வாறு பொருந்தும்? என்று வினவுதல்கூடும்.

இயற்கைப்பொருள்களுள்ளும், காரணம்பற்றிச் சிற்பிகளால் ஆக்கப் பட்டனபோலவே உயிர்ப்பொருள்களின் வடிவங்கள் தோன்றுகின்றன.

என்பு தசை நரம்பு குடல் முதலிய உறுப்புக்கள் அவ்வடிவங்களுக்குக் காரணம்போல் இயல்பானே அமைந்துகிடக்கின்றன. இவ்வாறு சொற்களுள்ளும் காரணஉறுப்புக்கள் இயற்கையானமைந்துள்ளன. அவற்றை விளக்கவேண்டி ஒரு சில இயற்பெயர்களை ஆராய்ந்து காட்டுவன்.

தமிழ்மக்கள் மலைவாழ்க்கையிலுள்ளகாலத்தில் தம்மைப்போல் இடம்விட்டுப்பெயர்ந்து இரைதேடியுண்டு உயிர்வாழ்வனவாகிய ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன முதலிய உயிர்ப்பொருள்களையும், கல் மண் நீர் தீ காற்று கரி விறகு முதலிய உயிரில்லாதபொருள்களையும் அறிந்தவர்களாய் உயிரில்லாதபொருள்களினின்றும் உயிருடையபொருளை வேறு பிரித்துவழங்கவேண்டிய அமயத்தில் அவ்வுயிருடையபொருள்களுக்கெல்லாம் பொதுவாக ஒரு பெயர் தோன்றத்தலைப்பட்டது. அப்பெயர்தான் எளிதாகிய இதழ்முயற்சியால் பிறக்கும் ஓரெழுத்தொருமொழியாகிய 'மா' என்பதாம்.

இந்த 'மா' என்னும் பெயராலே மக்களையும் மற்றுமுள்ள விலங்கினங்களையும் வழங்குவாராயினர். மக்களையும் மா என்னும் பெயரால் முன்புவழங்கினர் என்பதைப் பால்பகுத்துவழங்கிய பிற்காலத்தார் பன்மைக்குரிய கள்விகுதிகொடுத்து, 'தவத்துறை மாக்கள்' என வழங்குதலால் அறியலாம். விலங்கினங்களையும் அப்பெயரால் வழங்குதலைப் பாய்மா பரிமா அரிமா முதலிய சொல்வழக்கால் அறியலாம்.

பின்பு அந்த மா என்னும் பெயரே விலங்கினங்களினின்றும் மக்களைப் பிரித்துணர்த்தவேண்டி ம என்னும் பெயராய்க் குறுகிநின்று வழங்கப்பட்டது. இதனைப் பின்பு திணை பால் பகுத்துணர்த்துங்காலத்தில் மக்கள் எனக் கள்விகுதி கொடுத்துவழங்குதலால் அறியலாம்.

இவ்வாறு மக்களைப்பிரித்துணர்த்தவேண்டி ம எனக் குறுகிநின்ற பெயரே அம்மக்களுட் சிறந்த (உயிர்ப்பொருளாகிய) தலைவனையுணர்த்தவேண்டி னகரவொற்றடுத்து, ம(ந்)ன் என்ற பெயராய் வழங்கப்பட்டது. இது பின்பு பாற்பகுப்புக்காலத்தில் ம(ந்ந)ன்னன், மன்னவன் மன்னவர் மன்னர்கள் முதலிய சொற்களாகத் திரிந்தது.

இன்னும் அந்த ம(ந்)ன் என்னும் பெயரே உகரம்பெற்று ம(ன்)நு என நின்று மன்னரிற்சிறந்தோனை யுணர்த்திக்கொண்டு மானவர், மானுடர், மானிடர், மாந்தர், மனிசர், மனிதர் என மக்கட்பெயர் பலவற்றிற்கு மூலமுமாயிற்று.

இன்னும் ம என்னும் மக்களையுணர்த்தும் பெயரே ககர உயிர்மெய் யடுத்தும், அதன்மேல் உகரச்சாரியை பெற்றும் முறையே மக மகவு எனக் குழவியையுணர்த்தும் இருதிணைப்பொதுப்பெயருமாயிற்று.

பின்பு மக என்னும் அப்பெயர்தானே திணை பால் பகுப்புத்தோன்றன ள ர வீறுபெற்றுழி மகன், மகள், மகார் என உயர்திணைப்பெயராய்ப் பின்பு முறைப்பெயரும் ஆயின அவற்றுள், மகள் என்பது, மகளு எனப் பிறமொழியிலும், (மகடு) மகடூஉ எனத் தமிழ்மொழியிலும் திரிந்து உயர்திணைப் பெண்பாற்பெயரும் முறைப்பெயருமாயிற்று.

இன்னும் மா என்னும் பெயரே மகரவொற்றொழிய ஆ என நின்று, ணகரவொற்றடுத்து ஆண் என இருதிணைப் பொதுப்பெயராயிற்று.

அப்பொதுப்பெயரான ஆண் என்னும் சொல்லே உயர்திணைச்சிறப் புணர்த்தவேண்டி ணகரம் ளகரமாய்த் திரிந்து ஆள் எனவும், அது திரிந்து (ஆட் ஆடு) ஆடூஉ ஆடவர் எனவும் உயர்திணையாண்பாற்பெயராயிற்று.

இன்னும் மா என்னும் பெயரே முதலில் அகரத்தால் தொடரப் பெற்று ஒற்றிரட்டித்து அம்மா எனத் தாயையுணர்த்தும் முறைப் பொதுப்பெயராயிற்று. அது பின் வலிந்துநின்று அம்பா எனவும் தாயையுணர்த்தும் பெயராயிற்று.

இன்னும் அந்த அம்மா அம்பா என்னும் இரண்டுபெயர்களும் ஆவீறு ஐயாகத் திரிந்து அம்மை அம்பை எனத் தாயையுணர்த்தும் முறைப்பெயராய் வழங்கப்பட்டன, இவை விளியில் அம்மே, அம்மா, அம்பா எனவும் திரிந்தன.

அம்மை என்றதின் மகரம் போலித்திரிவால் அன்னை அந்நை அஞ்ஞை, அய்யை என வேறுபட்டுத் தாயையுணர்த்தும் முறைப்பெயராயிற்று. அந்நையை அஞ்ஞை என்னும் வழக்கு இன்னும் அஞ்ஞாப் பள்ளரிடம் காணலாம்.

இன்னும் அம்மா என்ற பெயரே போலித்திரிவால் அன்ன அந்நா அஞ்ஞா அய்யா என்றாய் அத் தாயோடொத்த தந்தைக்குப் பெயராயிற்று.

இன்னும் அம்மா என்னும் பெயரே போலித்திரிவால் அன்ன அண்ண என்று நின்று தன்னையையுணர்த்தும் முறைப்பெயராயிற்று. அம்மா, அப்பா, அய்யா, அண்ண முதலிய ஆகாரவீற்றுப்பெயர்கள் ஆதிகாலத்தில் எழுவாய்ப்பெயராயிருந்தன. அவை எழுவாய்ப்பெயரா யிருந்தமையாலன்றோ இக்காலத்தும் அவை அம்மாவை யழை; அப்பா வோடுண்பேன் என்பனபோல் வேற்றுமையுருபேற்று வழங்கப்பெறு கின்றன. அங்ஙனமன்றி விளிப்பெயராயே யிருக்குமாயின் வேற்றுமை யுருபேற்று வழங்குமாறின்று. பாற்பகுப்புத் தோன்றியகாலத்தில் அய்யா அய்யன் ஐயன் என்றும், அப்பா அப்பன் என்றும் அண்ண அண்ணன் என்றும் அம்மா, அம்மன், அம்மனே, அம்மணி, அம்மாள் என்றும் ஏற்றபெற்றி திரிந்தன. இவ்வாறு திரிந்த அய்யன், அப்பன், அண்ணன், அம்மாள் என்ற பெயர்கள் பின் விளியுருபேற்குங்கால் எழுவாய்ப்பெயரின் வேறான விளிப்பெயரும் அய்யா, அப்பா, அண்ண, அம்மா எனப் பழைய எழுவாய்ப்பெயர்போற் றோன்றின.

இன்னும் அந்த மா என்னும் பெயரே இரட்டித்து, மாமா என்னும் முறைப்பெயராயிற்று. இது பின் பால்பகுக்குங்காலத்தில் அன்பெற்று மாமன் ஆயிற்று. இதனடியாக விளியில் ஒரு மாமாவும் எழுவாயில் ஒரு மாமியும் தோன்றின.

மக்கட்பொதுமையுணர்த்தும் ம என்னும் பெயரே ககரவொற் றடுத்து 'மக்' என நின்று உயிர்க்குணமாகிய மகிழ்ச்சியையுணர்த்த னகர வீறு பெற்றுழி மகிழ்தற்குரியோன் என்னும் பொருளில் மகன் என்று கணவனையும், ளகாவீறுபெற்றுழி மகிழ்தற்குரியாள் என்னும் பொரு ளில் மகள் என்று மனைவியையும் உணர்த்தும் வேறொரு முறைப்பெயரு மாயிற்று. இப்பொருண்மையைக் கணவனுக்கு மகிழ்நன் என்ற பெய ருண்மையால் அறியலாம்.

இனி விலங்கினங்களையுணர்த்தும் மா என்னும் பெயரால் அவ் விலங்கினங்களோடொத்த அறிவுகுன்றிய முழுமக்களும் வழங்கப்பட்டனர். இதனை, 'மாவும் மாக்களும்' என்ற தொல்காப்பிச்சூத்திரம் வெளியிடும்.

இன்னும் மா என்னும் பெயரே, முதனின்ற மகாமெய் கெட்டு ஆ என்று நின்று விலங்கின்சிறப்புணாநின்றது. அதுதானே னகாவொற்றடுத்து ஆன் என நின்று யாடும், எருமையும், பசுவுமாகிய மூவினப்பெயராயிற்று.

இன்னும் மா என்னும் பெயரே டகாவொற்றடுத்து 'மாட்' என நின்று பசுவும் எருமையுமாகிய ஈரினப்பெயராயிற்று. அந்த மாட் என்பதுதானே முதன்மெய்யாகிய மகாங்கெட்டு ஆட் என நின்று அவற்றுள் ஓரினமாகிய ஆட்டுக்குப் பெயராயிற்று; டகாவொற்றீற்றுப் பெயராகிய மாட், ஆட் இரண்டும் உகாம்பெற்றுப் பின் மாடு, ஆடு என வழங்கப்பட்டன. இவற்றுள் ஆடு என்னும் பெயர் முதலில் யகாமெய் பெற்று யாடு என்றும் வழங்கப்பட்டது.

ஆதிகாலத்தில் வல்லொற்றிறுதிப் பெயர்களாயிருந்தவையெல்லாம் பிற்காலத்தில் உகாம்பெற்றுக் குற்றியலுகாவீறுயின. அவை முன்னர் ஒற்றீறுயிருந்தமையாலன்றே கல், முள் முதலிய ஒற்றீற்றுமொழிகள் உகாம்பெற்றுழிக் கல்லு முள்ளு என்று உயிரீறுயிருந்தும் வருமொழி முதலுயிரேறிமுடிய இடங்கொடுப்பதுபோலக் குற்றுகாவீறும் உயிரேறி முடிதற்கு இடங்கொடுக்கின்றன. அவை உண்மையின் உகாவீறன்மையால் தொல்காப்பியனர் குற்றுகாப்புணர்ச்சியை உயிரீற்றுப்புணரியலின் வேறுக வைத்தோதினர். ஆதிகாலத்தில் வல்லெழுத்துமெய்களும் மொழிக்கிறுதியாக வழங்கப்பட்டன. உகாவீறுகிய பிற்காலத்தில் மொழிமுதலெழுத்துக்க ளிவையென்றும், ஈற்றெழுத்துக்க ளிவை யென்றும் நியமிக்கப்பட்டன.

இவ்வாருக உயிர்ப்பொருளுணர்த்தும் மா என்னும் பொதுப்பெய ரொன்றே அவ்வுயிர்வேருபாடுபற்றி அவற்றின் பொருட்பெயர்களாயும், முறைப்பெயர்களாயும் வேறுபட்டு அவ்வுயிர்ப்பொருள்களையே யுணர்த்து கின்றது.

இம்மட்டிலமையாது மூவிடப்பெயர்களிலும் அம் மகரமெய் சென்று நின்று உயிர்ப்பொருள்களை யுணர்த்துகின்றது. மூவிடப்பெயர் முற் காலத்தில் ஒருமைக்கும் பன்மைக்கும் வேறுபாடின்றி இரண்டற்கும் பொதுவாகத் தன்மையில் நம் என்றும், முன்னிலையில் நும் என்றும், படர்க்கையில் தம் என்றும் மாவின் மகரவொற்றுநிற்கத் திரிபடைந்து உயிர்ப்பொருளையுணர்த்தின.

இம் மூவிடப்பெயர்கள் ஒருமை பன்மையிரண்டற்கும் பொதுவாக வழங்கப்பட்டனவென்பதைத் தனக்குரியர் எனக்குரியர் உனக்குரியர் என்னும் பொருளிலும், தமர், நமர், நுமர் என்றே வருதலாலும், தனர், எனர், நுனர் என மூவிடத்தும் ஒருமைப்பொருள்பற்றித் தனியே வழங் கப்படாமையாலும் அறியலாம். என்னவன் நின்னவன் என்றும் "நினவ கூறுவல் எனவகேண்மதி" என்றும் ஒருமையிற் பிரித்துவழங்குதல் பிற்காலவழக்கென்க.

அவற்றுள் நம் என்னும் தன்மைப்பெயர் போலிவகையால் நம் (ஞம், யம்) எம் என்று திரிந்து அப்பொருளுணர்த்திற்று. வேற்றுமை அல்வழி புகுக்குங்காலத்தில் அல்வழியில் நாம் என நீண்டது. யம் எம் இரண்டும் யாம் என அல்வழியிற் றிரிந்தன. நும் என்பது நிம், நீம், நீங்கள், நீமிர், நீவிர், நீயிர், நீர் ஆயிற்று.

ஒருமைபகுக்குங்காலத்தில், தாம் தான் ஆயிற்று. யாம் யான் ஆயிற்று. அது ஞான் வாயிலாக நான் ஆயிற்று. நீர், நீ யாயிற்று. இத்திரிபினுள் 'நீயிர் நீவிர் நான் எழுவாயலபெறு' என்ற நன்னூலார்க்கு நீர் என்பதன் திரிபு நீயிர் நீவிர் என்பனவும் யான் என்பதன் திரிபு நான் என்பதும் உடம்பாடென்றறியலாம்.

தொல்காப்பியனாரும் இவ்வாறுன திரிபை யுட்கொண்டனர் என்பதை 'நும்மின் றிரிபெயர்' என்ற அவர் கருத்தை யுற்றுநோக்கியுணர்க. பிற் காலவழக்கில் இத்திரிபுகளை இலக்கணநூலார் உலகவழக்கைநோக்கியும் இயற்கைமொழியின்செலவைப் பின்பற்றியும் மூவிடப்பெயர்களென்றும் அவை நெடுமுதல் குறுகி வேற்றுமையில் திரியுமென்றும் இலக்கணங் கூறினார்கள்.

இதுகாறுங்கூறியவாற்றால் உயிர்ப்பொருளுணர்த்தவந்த மா என்னும் ஒருபெயரே அவ்வுயிர்ப்பொருட்டிரிவு பலவற்றுள்ளும் உடன் திரிந்து வேறுபட்டு உயிர்ப்பொருளின் வேறுபாடுதோன்ற வழங்கப்பட்டதென்று நிரூபிக்கப்பட்டது.

அநாதியென்று சொல்லப்பட்டவேதமந்திரங்களிலுள்ள மகாரம் ஜீவவாசகமென்று வியாக்கியானங்களில் எழுதப்பட்டிருக்கிறது. அது 'மந்' என்ற தாதுவடியாக உணர்வுடைப்பொருளையுணர்த்தும் பெயராயிற்றென்று விளக்கியிருக்கிறார்கள். ஆதலால் இவ் வியற்பெயர்களெல்லாம் காரணங்கருதி ஒருவரால் ஆக்கப்படாமல் காரணமுடையனவாகவே இயற்கையானமைந்திருத்தல் கவனிக்கத்தக்கதே. இதனால் வடமொழியிலுள்ள 'மந்' என்கிற தாது அடியாக மேற்காட்டிய மா முதலான பெயர்கள் பிறந்தனவாகக் கருதுதல் கூடாது. வடமொழித்தாதுவும் மா முதலிய சொற்களின் பகுதியும் ஒன்றாயிருக்கிறதென்றே கொள்ளவேண்டும்.

இன்னும் குட் என்னும் ஒரு தாது வடமொழியுள் வளைதற்பொருளுணர்த்தும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. குட் என்னும் அவ்வொலியடியாக வடமொழிவாணரறியாத தமிழ்ச்சொற்கள் மிகப் பல அமைந்துகிடக்கின்றன. அவை:—குடில், குடி, குடிசை, குடை, கூடை, குடக்கை, குறுக்கை, கொடி, கோடு, (சங்கு) கோடு, (குளக்கரை) கோடு, (மரக்கொம்பு) கோடு, (விலங்கின்கொம்பு) கோடு, (மலை) கோட்டம்,

கோட்டை, கோண், கோணல், குளம், குட்டை, குழி, குழல், குடல், குடக்கு, குணக்கு, குடர்தம், கொடுக்கு, கொக்கு, கொக்கி முதலியன வாம். இவையெல்லாம் அவ் வடமொழித்தாதுவைக்கொண்டு ஆக்கப் பட்டனவா ? இயல்பானமைந்தனவா? என்று ஆராயத்தக்கன.

தமிழரும் வடமொழிவாணரும் ஒருவரையொருவ ரறியாதநிலையில் அவ் விருதிறத்தாரும் வழங்கும் சொற்கள் ஒருபடிப்பட்டிருக்குமாயின் அச்சொற்கள் இயற்கையானமைந்தனவென்றேகொள்ளவேண்டும். அல்லது அவ்விருதிறத்தாரும் ஆதியில் ஒருநாட்டாராயிருந்து பின்பு பிரிந்து பாஷை வேறுபட்டவரானாரென்று கொள்ளவேண்டும். இக் கருத்தாக்கு "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்" என்பது பொருந்துகின்றது.

ஒருசில பொருள்கள் இயல்பாகவேதிரிந்து வேறுபடுவனபோல ஒருசிலசொற்களும் இயல்பாகவேதிரிந்து வேறுபொருளுணர்த்துகின் றன. இதனை முன்காட்டிய மிகப்பலவான சொற்களிற் காணலாம். பின்வரும் ஆடு—மாடு, அயர்வு—மயர்வு, இளை—மிளை, முன்—பின், இலை—ஒலை, சடை—கிடை, அடை—வடை, இடை—கடை, அடி—முடி, அறம்—மறம் முதலியவற்றுள்ளும் காணலாம்.

இன்னோரன்ன திரிபையுடன்பட்டே நன்னூலார், 'வல்லொற்று வரினே இடத்தொகை யாகும், மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்' என்று பொருள்வேறுபாடு காட்டினர். (உதாரணம்: வடுகக் கண்ணன், வடுகங்கண்ணன்.)

இக்காலத்திலும் கிருஷ்ணன் என்ற பெயர் ஆசாரி என்னும் வருமொழிபுணர்துழி, கிருஷ்ணாசாரி என்று மாத்துவப்பிராமணர்பெயராயும், கிருஷ்ணமாசாரி என்ற திரிந்து வைஷ்ணவப்பிராமணர் பெயராயும் இருவேறுபொரு ளுணர்த்தக் காண்கிறோம். இத்திரிபும், அதன்

பொருள்வேறுபாடும் மக்களால் புத்திபூர்வமாகக் கற்பித்துக்கொள்ளப் படாமல் இயல்பானேயமைந்தன.

இவ்வாறு சொல்லும் பொருளும் இயல்பாகவே ஒற்றுமைபற்றி நிற்றலால் மரபுபற்றிய பெயர்களும் பிறவும் அநாதியாகவே பொருளோடு தொடர்புடையனவென்றேகொள்ளத்தகும். இவ்வாறுன தொடர்புடைய சொற்பொருள்களைக் காளிதாஸமஹாகவியும் 'வாகர்த்தாவிவஸம்பிருக்தௌ' என்று விட்டுநீங்காத ஒற்றுமையுடைய அர்த்தநாரீசுவாருக்கு உவமைகூறினர்.

கல்வியிற்பெரியாகிய கம்பநாடரும் அகத்தியமுனிவரை, 'என்றுமுளதென்றமிழியம்பியிசைகொண்டான்' என்றூர். இதில் 'என்றுமுள தென்றமிழ்' என்றதனுல் இயற்றமிழ்மொழிகள் அநாதியாயுள்ளனவென்றும், 'இயம்பிஇசைகொண்டான்' என்றதனுல் அவ்வியற்கைமொழிகளை மக்கள்வாய்ப்பட்டுவரும் வழூஉக்களைந்து செய்யுட்கு உரியனவாகத் திருத்தியமைத்தார் என்றும் கருதினுராயிற்று.

இயற்கையாவது எங்கும் நிறைந்த முற்றறிவுடைய முழுமுதற் கடவுளின் நித்தியஸங்கற்பரூபமான இச்சையால் நிகழ்வது. செயற்கையாவது சிற்றறிவுடைய மக்களின் இச்சையோடுகூடிய செய்கையால் நிகழ்வது.

முற்றறிவுடைய முழுமுதற்கடவுள் மக்களுயிருள்ளும் அருவாயமைந்து அறிவு இச்சை செயல்களைத்தோற்றுவித்தலால் அவ்வியற்கை மொழிகளெல்லாம் மக்களிடம் இயல்பானே தோன்றற்குரியன. ஆதலால் தமிழ்மொழியின் ஒருபகுதி அநாதியாயுள்ளதென்று கொள்ளத்தகும்.

வடமொழியுள்ளும் இவ்வியற்கையாலும் செயற்கையாலும் அமைதல்பற்றி ப்ராகிருதம், ஸம்ஸ்க்ருதம் என மொழி இருவேறுவகையாயிற்று. சொல்லின்கிழத்தியை உதிதை என்றும் அநுதிதை என்றும் இருவேறு வடிவுடையளாக வேதமும் கூறுகின்றது.

இதுகாறுங் கூறியவாற்ருல் இயற்கையறிவொன்றே யுடைய விலங்கினங்களுக்கு இயற்கையொலிக்குறிப்பு அநாதியாயமைந்திருப்பது

போல இயற்கையறிவுடைய மக்களுக்கும் இயற்கையொலிக்குறிப்பாலமையும் இயற்கைமொழிகள் அநாதியாயமைந்திருக்கவேண்டுமென்றும், அம்மக்கட்கு இயற்கையறிவோடு செயற்கையறிவு முண்மையால் அவ்வியற்கைமொழிகளைக்கொண்டு பல செயற்கைமொழிகளையும் ஆக்கிக்கொண்டனரென்றும், ஆதலால் இக்காலத்தில் இவை இயற்கைமொழி, இவை செயற்கைமொழி யென்று பகுத்தறியமுடியாதபடி அவை உருமாறிவிட்டன வென்றும் அறியலாம்.

ஆயின் இக்காலத்திற் பிறக்கும் மக்கட்குழவிகளிடம் அவ்வியற்கைமொழி தானேதோன்றலாமே? என்ற சங்கை யுண்டாகலாம். அக்குழவிகள் இயற்கைமொழியாற் பேசவேண்டிய பருவமும் உறுப்புக்களுந் தோன்றுதற்குமுன்னமே பெற்றோர்கள்பேசும் செயற்கைமொழிகளிற் பயிற்சியுண்டாகின்றமையால் அவ்வியற்கைமொழி புலப்படுதல் அரிதாயிற்று.

செயற்கைக்குப் புலப்பாடில்லாதவிடத்தே இயற்கை புலப்படுகின்றது. இதனைப் பின்வருமுதாரணத்தால் அறியலாம்.

"வல்லரக்கரின்மால்வரைபோய்விழுந்
தல்லரக்கினுருக்கழல்காட்டயற்
கல்லரக்குங்கடுமையவல்லநின்
சில்லரக்குண்டசேவடிப்போதென்றான்"

என்றமையால் வல்லரக்கரடிகள் காட்டிற்சென்று திரிந்து செயற்கைவலியடைந்தமையால் அவை கடுமையவாயினவென்பதும், அவ்வாறான செயற்கைவலிபெறாதவிடத்தே இயற்கையான் மகளிரடிக்கமைந்த மென்மை புலப்படுகிறதென்பதும் அநுபவத்தாலும் அறியத்தகும்.

இங்குத் தமிழின் பழமையைப்பற்றிப் பேசுமிடத்தில் இடையிடையே தொடர்புபற்றிக் காட்டப்பட்ட சொற்றிரிபுகளெல்லாம் பன்மொழிகளிலும் பயிற்சிபெற்றுயர்ந்த மொழிநூல்வல்லாரால் ஆராயத்தக்கனவாதலால் அவை அவரால் ஆராய்ந்து முடிவுசொல்லற் குரியன வென்றே அறிஞரால் அறியத்தகும்.

---

உ

# யவனமஞ்சரி.

[யவனபுரத்துப் "ப்ளேத்தோ" என்னும் தத்துவஞானியாருடைய முதன் மாணாக்கராகிய அரிஸ்தாதில் என்னும் புலவரால் யவன பாஷையில் எழுதப்பட்டுப் பூருவ யவனபுரவாசிகள் கைக்கொண்டொழுகிய அறநெறியை விரிவுறக் கூறும் இவ்வொழுக்க நூல், யாழ்ப்பாணத்துப் பருத்தித்துறைத் த. இராமநாத பிள்ளை (B A., Lond.) அவர்களால் முதனூற் கருத்தோடு மாறுபடாத ஆங்கிலமொழிபெயர்ப்பை ஆதாரமாகக் கொண்டு தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.]

## முன்னுரை.

தமிழரது நாகரிகத்தைப் பரப்புவதற்கும் தமிழ்நாட்டை முன்னேற்றமடையச்செய்வதற்கும் தமிழ்மொழியை விருத்திசெய்வதற்கும் பண்டைக்காலத்திற்போலப் பலப்பல கலைஞானநூல்களையும் சாஸ்திர நூல்களையும் இயற்றுவோர் பலர் வேண்டுமென்பது ஒருதலை. இவ்வுண்மையை நன்குணர்ந்தோர், அந்நியரது நாகரிகத்தை அவர் நூல்கள் மூலமாகக் கற்றறிந்து, விலக்கவேண்டியவற்றை விலக்கியும் போற்றவேண்டியவற்றைப் போற்றியும் நூல்கள் பலவெழுதித் தமிழுலகத்திற்குப் பேருதவிசெய்வாராக. முன்னொருகாலத்திற் பொருளதிகாரம் கிடைத்திலதாகையால், "எழுத்தும் சொல்லும் பெற்றும் பெற்றிலேம்" எனப் பாண்டியனும் தமிழ்ச்சங்கத்தாரும் புடைபடக்கவன்றதை யாவருமறிவர். இலக்கணவரம்புபெற்ற நந் தமிழ்மொழியில் தற்காலத்தில் ஒருநூலன்றிப் பலநூல்களே இல்லையெனக் கவலைப்படவேண்டியிருக்கிறது. மெய்கண்டசாஸ்திரம் உடையேமாயிருந்தும் தத்துவநூலாராயும் முறை தெரியாது மயங்குகிறேம். ஒரு தேசமுன்னேற்றத்துக்குத் தத்துவநூற்பயிற்சி இன்றியமையாததாகலான், மேனாட்டுத் தத்துவநூலொன்றை மொழிபெயர்த்துத் தமிழுலகத்திற்குப் பயன்படச்செய்தற்குச் சென்ற இருவருடங்களாக ஆசைப்பட்டிருந்தேன்,

என் நண்பர் ஒருவர் இம்முயற்சியைத் தொடங்கவேண்டுமென அடிக்கடி தூண்டத் தமிழறிவிற் குறைந்தமையால் இருவருடகாலமும் சில தமிழ்நூல்களை வாசித்துக் காலத்தைக் கழித்தேன். இது நிற்க, மேனாட்டு ஆசிரியர் ஒருவர் என்னைத் தம்மிடம் ஸம்ஸ்கிருதங் கற்கும் படி வேண்டினாராகத், தமிழ்தெரியாத கடையேனுக்கு ஸம்ஸ்கிருதத்தாற் பயனில்லையென்று மறுத்தேன்; என் வீம்புக்குணத்தால் இந்நூலை இயற்றுகிறேன் என்றும் சொன்னேன். இவ் வீண்வார்த்தையை நிறைவேற்றுவதற்காக நான் தொடங்கிய பொழுதுபோக்குமுயற்சியின்பயன் இம் மொழிபெயர்ப்புநூல். இது வீண்முயற்சியாகினும் ஆகுக. மேனாட்டார் பிறமொழிகளைக் கற்று அம்மொழிகளில் உள்ள சிறந்தநூல்களை ஆவலுடன் ஆராய்ந்து தம் பாஷையில் மொழிபெயர்த்துத் தம் பாஷையின் பாப்பை விரித்து அறிவை வளர்க்கும் முறையை அறிந்தோர் யாவரும், இம் மொழிபெயர்ப்புக் குற்றங்கள் பலவுடைத்தாயினும், வீண்முயற்சியென மொழியார்.

அரிஸ்தாதில் எழுதிய "நிக்கோமாக்கியன் ஒழுக்கநூல்" என்பதை வ. ஹ. பிற்றேஸ் (F. H. Peters) கிரேக்கமொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அவர் தம் நூலில் ஐந்தாம் பதிப்பில் எழுதிய முகவுரையை மொழிபெயர்த்து ஈண்டுத் தருதல் பயனுடைத்து. அம் முகவுரை வருமாறு:—

இந்நூலைக் கிரேக்கபாஷையிலிருந்து கிறிஸ்தவாண்டு 1881-ல் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தேன். பின்னர் 1890-ஆம் ஆண்டு பைஉவாட்டர் (Bywater) என்பவரின் கிரேக்கமூலப்பதிப்போடு எனது மொழிபெயர்ப்பை ஒப்பிட்டுநோக்கி மொழிபெயர்ப்பிற் பரிசோதனை செய்து சில குற்றங்களைத் திருத்தினேன். பைஉவாட்டரின் மூலப் பதிப்புப் பிழையில்லாததென ஆக்ஸ்போர்டு (Oxford) சர்வகலாசாலையின் ஆசிரியர்களால் நிச்சயிக்கப்பட்டது. பைஉவாட்டருக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன். எனது மொழிபெயர்ப்பை 1881-ஆம் ஆண்டில் முதன்முதல் அச்சிடும்போது வாசித்துத் திருத்தியதற்கும் சிலகுறிப்புக்கள் உதவியதற்குமாக ஸ்ரியுவாட் (Stewart) என்பவர்க்கும் கடமைப்பட்டிருக்கிறேன். இன்னும் முதற்பதிப்பில் உதவிசெய்த ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை யாசிரியர் ஆ. ச. பிராட்லி (A. C. Bradley)

என்பவருக்கும் கிளாஸ்கோ (Glasgow) சர்வகலாசாலை ஆசிரியர் யே. குக். உவில்சன் (J. Cook Wilson) என்பவருக்கும் நன்றி கூறுகின்றேன். பிந்திய பதிப்புக்களில் உதவிபுரிந்த எமது கல்லூரியில் என்னுடன் ஆசிரியராயிருந்த ல. அ. செல்பி பிச் (L. A. Selby Bigge) என்பவர்க்கும் ஒறியல் (Oriel) கல்லூரி ஆசிரியர் வ. க. கோல் (F. H. Hall) என்பவருக்கும் எனது நன்றியைச் செலுத்துகின்றேன். எனது மொழிபெயர்ப்புநூலிற் கூறப்படும் நூற்பெயர்களையும் ஆசிரியர்பெயர்களையும் பிரதான பதங்களையும் அகராதிக்கிரமஞ்செய்து நூலுடன் சேர்த்திருக்கிறேன். கிரேக்க மூலநூலைஇடையிடையே இம்மொழிபெயர்ப்புடன் ஒத்துவாசிப்பவர்க்கு அவ்வகராதி உதவியாகுமென நினைக்கிறேன்.

இங்ஙனம்,

F. H. PETERS,
(Oxford University)
(University College).

வைகாசி மாதம், 1893,
ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை,
சர்வகலாசாலைக் கல்லூரி.

ஆங்கிலமொழிபெயர்ப்பின் பன்னிரண்டாம் பதிப்பு 1916-ஆம் ஆண்டில் பீற்றேசால் பிரகடனஞ்செய்யப்பட்டது. பீற்றேஸ் ஆக்ஸ்போர்டுசர்வகலாசாலையைச்சேர்ந்தசர்வகலாசாலைக்கல்லூரியில் ஆசிரியராயிருந்தவர். "ஆயிரமுகத்தான் அகன்றதாயினும், பாயிரமில்லது பனுவலன்றே" என்பதை மேனாட்டாருமுணர்ந்து தம் நூன்முகத்து ஆக்கியோன்பெயர், வரலாறு, நோக்கம், காலம், இடம், நூற்பெயர் முதலியவற்றைச் சுருக்கமாகக் கூறுவது வழக்காறு என்பதையும், அவ் வாங்கிலமொழிபெயர்ப்பை எவ்வாறு நுண்ணிதாகப் பீற்றேஸ் செய்தாரென்பதையும் விளக்குவதற்காக அவர் பதிப்புரையையும் மொழிபெயர்த்திருக்கிறேன். இம் மொழிபெயர்ப்புநூல் "யவனமஞ்சரி" யென வழங்கப்பெறும். (யவனராவார் மேற்றிசைக்கண்வதியும் ஒரு மக்கட்கூட்டத்தினர்: மஞ்சரி என்பது ஒழுக்கம்) இனி நூலாசிரியராகிய அரிஸ்தாதில் (Aristotle) என்பவரின் வரலாறு அத்தியாவசியம் வேண்டப்படுவதால் அவர் வரலாற்றினை என் சிற்றறிவுக்கெட்டியபடி ஒருவாறு சுருக்கிக் கூறுகிறேன்.

## நூலாசிரியர் அரிஸ்தாதில் என்பவரின் வரலாறு.

யவனதேசம் என்னும் கிறீஸ் தேசத்தில் (Greece) ஸ்ரக்கிரு (Stagira) என்னும் இடத்தில் கி. மு. 384 ஆம் ஆண்டு அரிஸ்தாதில் பிறந்தவர். கிரேக்கதேசத்துத் தலைநகரான ஏதென்ஸ் (Athens) என்னும் நகரில் வசித்து ஒப்பற்ற தத்துவஞானியாகிய 'பிளேத்தோ' (Plato) வின் அருமைச் சிஷராயிருந்தனர். மகா அலெச்சாந்தர் (Alexander the Great) எனப்படும் கிரேக்க சக்கரவர்த்தியின் குரு இவரே. அலெச்சாந்தர் பெருஞ்சேனாதிபதி. அவர் கிரேக்க தேச முழுவதையும் ஒருகுடைக்கீழாண்டவர்; சின்னாசியா, பார்சியா, ஆப்கானிஸ்தானம் முதலிய நாகரிகமடைந்த நாடுகளையெல்லாம் கைப்பற்றி, இந்தியாவினுட்புகுந்து சிந்துநதிப்பக்கத்தில் போரஸ் என்னும் அரசனுடன் யுத்தம்புரிந்தவர். அலெச்சாந்தர்காலத்தில் கிரேக்கதேசம் உன்னதநிலையிலிருந்தது. பின்னர் ஒட்டோமன் துருக்கரின் (Ottoman Turke) கொடுங்கோன்மை காரணமாய்க் கிரேக்கநாடு அடிமைநிலையடைய, அக் கிரேக்கசாதியாரும் குன்றினர். ஆனால் அவர் நாகரிகம் ஏட்டுவழக்கிலிருந்த இலக்கியங்களால் அறியக்கிடக்கின்றது.

அரிஸ்தாதில் அலெச்சாந்தருக்குக் குருவாகுமுன் இருபதுவருடகாலம் பிளேத்தோவுடன் வசித்துத் தத்துவஞானோபதேசம் பெற்றார். எட்டுவருடகாலம் அலெச்சாந்தருக்குக் குருவாயிருந்தார். அதன்பின் இலேசியத்தில் தமது சந்தானத்தைச் சேர்ந்த சிஷர்க்குப் பன்னிருவருடகாலம் ஞானோபதேசஞ்செய்தனர். இக்காலத்திலேயே இந்த ஒழுக்க நூலை ஓதினார். கி. மு. 322ஆம் ஆண்டில் அரிஸ்தாதில் இறந்தார். அவரது வாழ்க்கைவரலாறு கி. மு. இரண்டாநூற்றாண்டில் அப்பலோடினஸ் (Appolodinus) என்பவரால் எழுதப்பட்டது. அன்றி வேறு பலரும் எழுதியிருக்கிறார்கள்.

அரிஸ்தாதில் பல சாஸ்திரங்களும் பல கலைஞானங்களும் கற்றுஅருந்தவ ஆசிரியராய் ஒப்பாரும் மிக்காருமின்றி விளங்கினர். மேனாட்டுத் தத்துவஞானிகளிற் சிறந்தவர் இவரே. இவர், தற்காலத்துத் தத்துவ ஆராய்ச்சிவல்லுநர் விளங்குதற்கரிய அரும்பெரும்விஷயங்களையெல்லாம் நுண்ணிதாய் ஆராய்ந்து மிகவும் எளிய நடையில் தெளிவாய் எவர்க்கும் விளங்கும்படி பல நூல்கள் இயற்றினார். மக்களது அறு

பவம் நாகரிகமில்லாத பண்டைக்காலத்திலே பயன்படாததாயும் முறை வகுக்கப்படாததாயும் மாணவரை மயக்குந்தன்மையதாயும் இருந்தது. காரணகாரிய முறையாக அநுபவத்தை அளவைசெய்து, பிரமாணங்களை எடுத்தோதி, அறிவை ஒழுங்குபடுத்தி முறைவகுத்தவர் இவரே. அநுபவத்தை அழகிய சாஸ்திரரூபமாக்கியவரும் இவரே.

அரிஸ்தாதில் பல சாஸ்திரங்களையும் வகுத்தவர். இலக்கியப்பகுதியாகிய செய்யுளாராய்ச்சி நாடகவாராய்ச்சி முதலியவற்றின் இலக்கணங்களையும் ஆராய்ந்து உதவியுள்ளார். பிரசங்கநூல், வானநூல், பௌதிகநூல், பயிர்நூல், விலங்கியல்நூல், பொருணூல் முதலியவற்றையும் எழுதினார். இவரது தருக்கநூல் யாதேனும் ஒருகுறைவுமில்லாமல் ஒப்பற்ற நூலாக இன்றும் நின்று நிலவுகின்றது. அந்நூலின் நுட்பங்களை விரித்துரைக்கவியலாது. அதில், பிற்காலத்தவர்க்கு உதிக்கத்தக்க சந்தேகங்களையெல்லாம் ஆலோசித்து அவற்றிற்கும் விடையெழுதியுள்ளார். இத்தருக்கநூலே இவரது புகழை என்றென்றும் நிலைநாட்டும். தருக்க நூலறிவில் மேல்நாட்டில் யாவரினும் சிறந்தவர் இவரேயெனலாம். இவரது ஒழுக்கநூலை மேனாட்டார் பலரும் தத்தம் மொழிகளில் மொழிபெயர்த்துக் கற்றும் ஆராய்ந்தும் உரைகள்செய்தும் வருகின்றனர்.

இவர் தத்துவஞானநூல்களும் பல இயற்றினர். ஆன்மா உண்டென்பதும் உலகு மெய்யென்பதும் நமது சித்தாந்தநூலாசிரியர்கள் கூறியவாறு உவமானங்களாலும் ஏதுக்களாலும் விளக்கியுள்ளார். இந்த ஒழுக்கநூலைத் தம் தந்தை நிக்கோமாக்கஸின்பெயரால் வழங்கினர். பின்னர் அது ஏட்டுவழக்கிற் பலகாலம்நின்று துலங்கிற்று. கிரேக்கரது நாகரிகம் அழிந்தபின்னர் நானூறுவருடங்களாக இந்நூல் கற்கப்படாதிருந்தது. இவ் வரியநூலின் மகிமையை ஐரோப்பியதேசத்தவர் அறியாதிருந்தனர். பின்னர் உரோமரும் கிறீஸ்தவ குருமாரும் இந்நூலை மிகவும் போற்றிக் கற்றுவந்தனர். இந்நூல் ஒழுக்கநூல்களுள் மிகவுஞ் சிறந்தது. இவ்வாறு ஒழுகுக எனக் கற்பியாது, ஒழுக்கத்தின் நோக்கத்தை ஆராய்கின்றது. இந்நூலில் வீட்டுநோக்கமாக ஒழுக்கங்கூறவில்லையெனச் சிலர் கண்டிப்பர். அது பொருந்தாது. வீட்டைப் பற்றிய ஒழுக்கங்கூறுதல் மேனாட்டுத் தத்துவஞான சந்தானத்தாரின் வழக்கமன்று. மேலும் இந்நூல் ஆராய்வது இம்மைச் சீவியத்தில் எவ்வாறு

ஒழுகவேண்டுமென்பதே. வீட்டை ஆராய்வது தத்துவசாஸ்திரம், ஒழுக்கநூலன்று.

ஆகலின் இம்முறை குற்றமன்றென வொழிக. மேனாட்டார் ஒவ்வொரு சாஸ்திரத்தின் விடயங்களையும் செவ்விதாக வரையறுத்துள்ளாராகலின் ஒரு சாஸ்திரத்தாற் பெறப்படும் துணிபுகளை மற்றொரு சாஸ்திரத்தில் மேற்கோளாக உபயோகிப்பர். உரையளவையை ஆளாமல் வழியளவை மூலமாகத் தங் கொள்கைகளை நிரூபித்திருக்கின்றனர். ஆசிரியர் ஆராய்வது புத்திதத்துவத்திற்குட்பட்டதையே. புத்திதத்துவத்திற்குட்பட்டதைக் காண்டலாலும் கருதலாலும் ஆராய்ந்து நிச்சயிப்பதே முறை. இவ்வுலகவாழ்க்கை நல்லதென்றும் எவ்வாறு சந்தோஷசீவியம் செய்யலாமென்றும் ஒழுக்கநூல் விதந்தோதும். அறம் பொருள் இன்பம் என்னும் முப்பொருளை ஆராய்வதே ஒழுக்கநூன் முறை. திருவள்ளுவரும் இவ்வாறு ஆராய்ந்து உபதேசிப்பதை அறிவாம். இம்முறைதழுவி ஒழுக்கநூல் ஆராய்வதே தற்காலத்தவர்க்கு அவசியம். மறுமையை நம்பாதோர்க்கும் நல்லொழுக்கம் வேண்டுமென்பதை எவரும் எடுத்தாளும் வழியளவையான் வலியுறுத்திய ஆசிரியரது பெருமையை எவ்வாறு வியந்துகூறலாம்?

## இவ்வொழுக்கநூலில் அடங்கியவை.

இந்நூலின் முதற்கண் நோக்கமெதுவென ஆராய்வான் புகுந்தார்; இரண்டாம்பாகத்தில் அறத்தினது இயல்பை வரைந்தார். ஆசிரியர் இவ்விரண்டாம் பாகத்தில் 'சமன்' எனப்படும் அளவுகடவாதொழுகுதலை நுண்ணிதாக ஆராய்ந்துள்ளார். மூன்றாம்பகுதியில் நிச்சயித்தலின் இலக்கணத்தை விரிவாய் எழுதி, இறுதியில் வீரம் அளவுகடவாதொழுகுதல் என்னும் இரண்டறத்தையும் எடுத்தோதினார். நாலாம் பாகத்தில் ஏனைய பல அறங்களையும் ஒவ்வொன்றாகத் தம்மதம்பற்றிக் கூறினார். நீதியின் இலக்கணங்களை ஐந்தாம்பாகத்தில் விரிவாக விளக்கினர். மிகவும் நுட்பமாய்ப் புத்திதத்துவத்தின் மேன்மைகளையும் அறங்களையும் முறைவகுத்துத் தெளிவாக ஆறாம்பாகத்தில் ஆராய்ந்தார். ஏழாவதாக எவ்வறத்திற்கும் ஆதாரமான அடக்கமுடைமையின் வரையறையை விரித்துரைத்தார். ஏழாம்பாகத்திறுதியில் இன்பத்தைப்பற்றிய அபிப்பிராயங்களையும் சிறிது மொழிந்தனர்.

எட்டாம்பாகத்தில் சாதாரண ஒழுக்கத்திற் சிறந்த கடவுளதுசத்தியாகிய அன்பையும் அதன் மூலமாகிய கேண்மையையும் சிறப்பாக உரைத்தனர். ஒன்பதிலும் கேண்மையின் வரலாற்றைத் தொடர்ந்து கூறினர். அறங்களின் இயல்பு முன் கூறிப் பின் இன்பத்தின் ஆராய்ச்சி செய்த ஆசிரியர் இடையில் இக்கேண்மையைப் பற்றிய இருபாகத்தையும் சிங்கநோக்காக வைத்தார்போலும். பத்தாம்பாகத்தில் இன்பத்தின் சொருபத்தை விளக்குமுகத்தான் அறம் பொருள் இன்பம் சந்தோஷம் என்பவற்றின் தன்மையைத் தம் மாணவர்க்கு அறிவுறுத்தினர். அதிகாரமுறைகளும் ஒழுங்குபடுத்தியுள்ளார். இந்நூலில் ஆசிரியரது மனநூலாராய்ச்சியும் கொள்கைகளை விளக்கும் ஆற்றலும் தருக்கநூலறிவும் மிகவும் மெச்சத்தக்கன. இந்நூலின் இறுதியிற் சந்தோஷத்தின் இலட்சணங்களை ஆராய்ந்து தியானத்தினது மேன்மை கூறிமுடிக்கும் முறை வியக்கத்தக்கது.

## தமிழ்மொழிபெயர்ப்பின் வரலாறு.

கிரேக்கமொழியில் எழுதப்பட்ட இத் திவ்வியநூல் பல பிரதி கொண்டு ஆராயப்பட்டு ஆங்கிலத்தில் பிற்றேஸ் என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டது. ஒரு பாஷையின் பதங்களை வேறோர் பாஷையின் பதங்களால் மொழிவது இலகுவன்று. ஆங்கிலமொழியில் இந்நூல் பல கற்றோரால் நன்கு மொழிபெயர்க்கப்பட்டது. இந்நூல் தமிழுலகத்திற்குப் பயன்படுமாறு தமிழ்மொழியில் இயன்றவாறு மொழிபெயர்க்கத் தொடங்கினேன். பெரும்பாலும் வசனங்களை உள்ளவாறே முறை பிறழாமல் மொழிபெயர்த்தேன். இம்மொழிபெயர்ப்பிற் சொன்னயம் பார்ப்பது பயனுடைத்தன்று. தமிழ்மொழியிற் பல ஒழுக்கநூல்கள் இருப்பினும் ஒழுக்கத்தைக் காரண காரிய முறையான் ஆராய்வார் நம் நாட்டில் தற்காலத்தில் இல்லை. இக்குறைநீக்கும்பொருட்டும் மேனாட்டு முறைகளை நம்மவர் அறியும்பொருட்டும் இந்நூலை மொழிபெயர்த்தேன். இனி மேனாட்டார் அளவை முறையைப்பற்றிச் சிறிது கூறிமுடிப்பேன் மேனாட்டார் சாஸ்திர வரையறைகளை நுட்பமாய் ஆராய்வதைக் காண்க.

மேனாட்டார் பற்பலநூல்கள் கல்விமுறையைப்பற்றி இக்காலத்தில் எழுதுகிறார்கள். சாஸ்திரங்கள், இலக்கணங்கள், இலக்கியங்கள், கண்டனங்கள் முதலியன கற்கும் முறையும் கற்பிக்கும் முறையும் மிக

அழகாக உரைக்கின்றனர். மேல்நாட்டில் எத்தன்மையார் அளவைநூல் ஆராய்கிறார்கள் என்பதைக் கூறுகின்றேன். இளமையில் இலக்கிய இலக்கணங்களில் தேர்ச்சியடைந்தோர் தத்துவஞான ஆராய்ச்சியில் விருப்பமுடையராயிருப்பின் அதை ஆராய்தற்குத் தகுந்த கல்வியறிவுடையோராவர். இலக்கிய இலக்கணங்களைக் கற்கவே மாணவர் வாலிபப் பிராயம் அடைவர். இப்பருவத்தில் மாணவர் கணிதம், இயற்கைச் சாஸ்திரங்களாகிய பௌதிகசாஸ்திரம், பயிர்நூல், விலங்கியல்நூல் முதலியவற்றைக் கற்று வல்லுநராகாவிடினும், ஓரளவில் இச்சாஸ்திரங்கள் அறிந்தவராயிருப்பர். அதன்பின்னர்த் தத்துவநூல் கற்பதற்காகத் தருக்கநூலை நல்லாசிரியரிடம் கற்பர். பெரும்பாலும் பதினெட்டாம் வயதளவில் ஸர்வகலாசாலைகளிலே தர்க்கநூல் கற்க ஆரம்பிப்பர். அந்நியர்முறையெனக் கண்டியாது இம்முறையே நம் நாட்டிலும் கற்றல் நன்று. தருக்கநூல் தமிழிற்கிடைத்திலவெனினும் காலவழக்கில் அக்குறை நிவர்த்தியாம். தருக்கநூல் அறிந்த பின் மனநூல்களையும் வாசித்துணரலாம். உணர்ந்தபின் சமயநூல்களாகிய சித்தியார் சிவஞானபோதம் முதலியவற்றை நல்லாசிரியரிடம் ஒருமுறை கற்றல் அவசியம். மாணவன் இனி எந்தநூலையும் தானே வாசித்துச் சிந்தித்துத் தெளிதல் வேண்டும். தத்துவங்களைச் செப்பமாக அறிவதற்கும் நுண்ணிதாக ஆராய்தற்கும் அளவைநூல் வேண்டப்படும். இவ் வளவைகள் சிற்சில நூல்களில் அங்குமிங்குமாய் முறைபிறழ்ந்து கிடக்கின்றன. மேல்நாடுகளிற்போல அளவையை ஒரு நூலாக வகுத்தல் நன்று. இனி மேனாட்டு அளவைமுறை கூறுவேன்.

## மேனாட்டு அளவை முறைகள்.

அளவைநூல் என்பதென்னை? மனிதன் உண்மையை அளவை செய்யும் முறை எது? உண்மை என்பது என்ன? இவற்றின் வரைவிலக்கணத்தை எவ்வாறு ஆராய்வது? மெய்யைப் பொய் என்றும் பொய்யைமெய் என்றும், தோற்றத்தை உண்மையென்றும் உண்மையைத் தோற்றமென்றும், சத்தம் அசத்தம் நித்தம் அநித்தமென மாறுகோள்கள் உண்டென்றும், இவற்றிற்கெல்லாம் சமாதானம் கூறியும் பலவாறு கூறி மயங்க வைக்கின்றனர். அளவைநூலில் ஒவ்வொருபதமும் ஒரேயொரு அர்த்தமுடையதாய்ப் பிரயோகிக்கப்படவேண்டும், சொற்களின்

பொருளை வரையறுத்தபின் உண்மையை இயன்றவளவு அளவைசெய்யத் தொடங்கலாம். இனி மேனாட்டார் அளவைமுறைகளை நோக்குக. அவை தமிழ்நாட்டுப்பண்டைமுறைகளுடன் ஒத்திருப்பதை ஆராய்ந்து உணர்க.

இப்பூமி ஞாயிற்றிலிருந்து பலயுகங்களுக்குமுன் பிரிந்து, ஒரு தீப் பிழம்பாயிருந்து, காலஞ்செல்லச் செல்லக் குளிர்ந்த அண்டமாயிற்று. சூரியன் யாண்டையது என வினவின், பரமாணுக்களால் ஆக்கப்பட்ட தென்பர். பரமாணுக்கள் சூக்குமமாய் இடத்தில் இருப்பன. இவ் விடம் எவ்வாறுயதென்றால், இடத்தில் நிகழ்பொருள் இடத்தைவிட்டு நில்லாமையின் இடத்தின் தன்மை எல்லையில்லாததெனச் சொல்வா ரேயொழிய, அது எவ்வாறு தோன்றியதென்பதை விளக்கார். ஏனெனில் அது அவரது அளவைக்கு எட்டிலதென்பர். ஸ்பிேனாசா என்னும் ஒரு தத்துவஞானி இடம் கடவுளது குணமென்பர். இதை அவர் வழி யளவையால் நிரூபிபார். அவர் ஊகித்தறிந்தது உண்மையாயினும் அநு மித்துக் காட்டவில்லை.

இது நிற்க. குளிரக் குளிரப் பொருள் சுருங்குவது உண்மை. இது காரியானுமானத்தால் அநுபவத்திற் பெறப்பட்டது. ஆதித் தனைச் சுற்றிச்சுற்றிச் சுழன்றுகொண்டிருந்த தீப்பிழம்பு குளிர மட் கண்டம் மேற்பரப்பில் உண்டாயது. இம் மட்கண்டம் உள்ளிருந்த திரவபதார்த்தத்திலும் கனமாகையால் ஆகருஷணசக்தியால் பூமியில் தாழ்ந்தது. இவ்வாறு பூமிசுருங்க மேடுகளும் பள்ளங்களும் தோன் றின. இம்மேடுகள் மலைத்தொடர்கள். இப்பள்ளங்கள் சமுத்திரங்க ளும் கடல்களுமாயின. மட்கண்டம் படைபடையாய் உளது. இப் படைகள் ஊர்வதுண்டு. அப்போது மேடு பள்ளமாதலும் பள்ளம் மேடாவதும் உண்டு. இதிகாச புராணங்களிலும் இப்புரட்சிகளைப்பற்றி வாசிப்போம். சிலப்பதிகாரம் முதலிய பழையநூல்கள் இப்பூமியின் புரட்சி அதிர்ச்சி முதலியவற்றைக் குறிக்கின்றன. மேலும் கடல்மீன் களின் எலும்புகள் மலைச்சிகரங்களின் மட்கண்டங்களுட் காணப்படுகின் றன. எமது இமயமலையே ஒரு இளம்மலை. அது சமுத்திரமாயிருந்த தென்பர். இங்ஙனமாயின் இடைச்சங்ககாலத்திற்குமுன் நாற்பத்தேழு தமிழ்நாடு அழிந்தது விநோதமன்று. மட்கண்டம் படைபடையாய்

இருப்பதால் அவை ஊரும்போது நாடுநகரங்கள் அழியும். பூமி குளிர்ந்து இறுகிவிட்டமையால் தற்காலத்தில் இம்மாற்றங்கள் அதிகமில்லை. பூமி இன்னும் உட்பகுதியில் உஷ்ணமாகவே இருக்கிறது. ஒவ்வொரு அறுபத்துநான்கு அடிக்கும் ஒருபாகைசூடு கூடுகின்றது. இவையெல்லாம் காண்டல் அளவையாற் குறிக்கப்பட்டு வேதனுமானத்தால் முறை வகுக்கப்பட்டுப் பெரிதும் பயன்பயப்பன.

இப்பூமியில் முதன்முதற் றோன்றியது புல் மரம் முதலிய பரிசத்தை அறியும் ஓரறிவுயிர்கள். இவ் வோரறிவுயிர்கள் ஐம்புலன்களில் இழிவாய ஊறு உடையன. இவ் வொரு ஞானேந்திரியத்தால் அளவை செய்து அறியப்படுவன வன்மையும் மென்மையும். பிராஞ்சுதேசத்துக் கொண்டிலாக் என்னும் தத்துவஞானி ஓரறிவுடைய ஓர் பதுமையைப்பற்றி ஒரு விநோத ஆராய்ச்சி எழுதியுள்ளார். இப்பதுமைக்கு யாதொன்றுந் தெரியாது. அதன் அறிவு முற்றும் மழுங்கியிருந்தது. அதற்கு முகத்தலறிவு ஒன்றுமே உள்ளது. நாற்றத்தை அறியும் சக்திக்கே விடயிக்க விடயமில்லாமல் அஞ்ஞானமயமாய் இருந்தது. இத்தருணத்தில் அது ஒரு ரோஜாப்பூவை மோந்ததென்போம். பதுமைக்கு அது நறுநாற்றமோ தீநாற்றமோ வெனத் தெரியாது. ரோஜாப்பூவென விளங்காது; ஏதோ ஒரு பொருள் தன்னை எழுச்சி செய்கிறதென நினைக்கும். பின்னர் ஒருமுறை மோக்க நேரிட்டதாயின் அதின் இன்புறும். இவ்வாறு அடிக்கடி ரோஜாப்பூவை மோந்ததாயின் ரோஜாவை மற்றும் பூக்களினும் வேறுப் அறியும். இடையிடை பலகாலம் இவ்வாறு மோந்ததாயின், பதுமைக்கு ரோஜாப்பூவை அதன் அபிமுகமாத்திரையானறியும் ஓர் சக்தி உண்டாகும். வேறு பூக்களையும் மோந்து வெவ்வேறு பொருள்களைக் கந்தத்தால் அறிந்து உலகமெல்லாம் கந்தமென நினைத்திருக்கும். இது வாயிற்காட்சி. மற்றை ஞானேந்திரியங்களால் வாயிற்காட்சி பலவற்றைப் பெற்றுப் பொருள்களை இனம்பற்றி வகுத்தறியும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் முதலியனவெல்லாம் வாயிற் காட்சியாற் பெறப்படும் பொருட்குணங்கள். வாயிற்காட்சி, பிரத்தியட்சக்காட்சி, இந்திரியக்காட்சி என்பன ஒரு பொருட்கிளவி. ஞானேந்திரியங்களால் பரிசம், ரசம், கந்தம், ரூபம், சத்தம் ஆகிய காட்சிகள் பெறப்படும்.

ஈண்டு ஆங்கில அநுபவமுறை கூறுதும். ஆங்கிலத்தத்துவஞானியாகிய யோன் லொக் என்பவர், மனம் ஒன்றும் எழுதப்படாத

வெள்ளைக்கடுதாசிபோலும் வயிரக்கற்றுண்டுபோலும் என்பர். உணர்ச்சியில்லாத இம்மனதில் வாயில்வழியாக முன்னிலைப்பொருள்கள் தாக்குறும். அப்போது ஒவ்வொருபொருளும் ஒவ்வொரு அடையாளமாய்ப் பதியும். இஃதெல்லாம் வாயிற்காட்சி. இதனைத் தற்காலத்து ஐரோப்பிய மனநூலாரும் விடயித்தல் என்பர். சிவஞானமுனிவரும் சிவஞான பாடியத்தில் "எவ்வுணர்வு நிகழ்ந்துழி எப்பொருள் விளங்கும் அப்பொருள் விடயமென்க" என்றார். இது நிற்க. மனம் ஆறுதலாயிருந்து ஒவ்வொருகாட்சியையும் மற்றொருகாட்சியுடன் உற்றுப்பார்த்து ஒப்பு நோக்கி இனமுடையவற்றை ஒருவகுப்பாக்கி முறை வகுத்துப் பொருட்குணங்களுள் வித்தியாசம் நோக்கும். பொருள்களெல்லாம் நினைவுமுறைபற்றித் தொகுக்கப்பட்ட குணங்களின் தொகுதியென்றார். எனினும் தனது கொள்கையில் ஐயப்பட்டு, 'குணியெனப் பொருளில்லை; குணங்களின் சமூகமே பொருளென்பார் மதத்தைக் கண்டித்து, அவயவியில்லாமல் அவயவங்கள் ஒன்று சேர்ந்திருப்பது விநோதமென்றார். குணங்களின் கூட்டாவை ஆதாரமாய் நின்று நிலைக்கச்செய்யும் எப்பொருட்கும் அவயவியாகிய ஒரு பதார்த்தம் எத்திரவியத்திலும் அந்தரங்கமாய் உளதென நிரூபிக்க முயன்றனர். பின்னர்த் தம்மதத்திற்குமாறாய்ப் பல வாயிற்காட்சிகளை ஒருங்கு சிந்தித்துச் சிந்தனைக்காட்சிகள் பெறுமென மொழிந்தார். முன் சிந்தனையாற்றலில்லாத மனம் பின் சிந்தனைக்காட்சிகளைச் சிந்திக்கும் ஆற்றலுள்ள மனமாய் மாறுதலைக் காண்க. இவ்வாறு லொக் தெளிவாகச் சிந்தியாமல் முரண்படக்கூறினர்.

இவர் தம்மதம் மேற்கொண்டு களைந்த, கிறிஸ்தவ குருவாகிய பேர்க்கிலியென்னும் 'ஆங்கில அநுபவமுறைச்' சந்தானத்தைச் சேர்ந்த தத்துவஞானி ஒருவர்,—"ஒருபொருளை உண்டென அறிவதற்கு அது யாரோ ஒருவராலாயினும் விடயிக்கப்படவேண்டுமென்றும், இவ்வந்தரங்க ஆதார திரவியப்பொருள் விடயிக்கப்படாமையால் இல்லை யென்றும், மேற் கூறப்பட்ட அந்தரங்க ஆதார திரவியப்பொருள் வாயில்களால் விடயிக்கப்படாத ஒருபொருளாயின், அத்திரவியத்தை அறிதற்கு ஐம்பொறி யொழித்து வேறோர்பொறி வேண்டுமென்றும்" வாதித்தார். ஐம்புலன்களால் விடயிக்கப்படாத பொருள் பொருள் அன்றென

விஞ்ஞானவாதங் கூறினர். விடயிக்கும் சேதனன் உண்டென நிரூபியாது தம்மதம் கூறினர். இச்சந்தானத்தைச் சேர்ந்த ஹ்யூம் என்னும் தத்துவஞானி இச்சேதனன் நிரூபிக்கப்படவில்லை என்பதை எடுத்துக்காட்டி, சேதனன் இல்லையாயின் அசேதனப் பொருளுமில்லையென நிரூபித்தார். விடயிக்கப்படாத பொழுது பொருளே இல்லை என்பது சித்தாந்தமாயின், ஹ்யூமினது ஆசங்கை வலியுறும். ஹ்யூம் காண்டற்பொருளெல்லாம் மயக்கமெனக் கூறி ஆங்கிலச் சூனியவாதத்தை நாட்டினர். ஆங்கில அனுபவமுறையாரின் குற்றங்களையும் மேன்மைகளையும் ஆராய்ந்துணர்க.

இனி டார்வின் என்னும் ஆங்கிலப் பரிணாமவாதியின் முறையை ஆராய்வோம். காண்டல் அளவையால் துணியப்பட்ட பொருள்களை வேதனானுமானத்தால் ஒழுங்குபடுத்திப் பெபர் சாதி குணம் வகுப்பதே காரியானுமானமுறை. காரியானுமானமுறையாலே இயற்கைச் சாஸ்திரங்களாகிய பௌதிகம், பயிர்நூல், விலங்குநூல் முதலியனவும் ஆயுள் வேதம், வில்வேதம் முதலிய கலைஞானப் பயிற்சிகளும் வகுக்கப்படும். காரணானுமானத்தால் அட்சரகணிதம், கேத்திரகணிதம், தருக்கநூல், ஒழுக்கநூல், அழகுநூல், தத்துவநூல் முதலிய திறன் ஆராயும் நூல்களெல்லாம் வகுக்கப்பட்டன. இது நிற்க. வாயிற்காட்சியால் நிருவிகற்பவுணர்வே நிகழும். பெயர் சாதி குணம் அறிந்து பொருளை நிச்சயிப்பதே மனநூலார் கூறும் மானதக்காட்சி. வாயிற்கட்சி ஒன்று விடயிக்கப்பட்டுச் சிந்திக்கப்பட்டு, ஒழுங்குபடுத்தப்பட்டு முன்னிருந்த அறிவுடன் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டு விடயமாம்போது மானதக் காட்சியெனப்படும். இத்தகைய மானதக்காட்சிகளை ஆயிரக்கணக்காயுடைய மனம் உலகில் தோற்றநாசங்களை நோக்கி உண்மைகளையெல்லாம் காரண காரியத்தொடர்பால் ஒழுங்குபடுத்திச் சாஸ்திரங்களை வகுக்கும். காரியானுமானமும் காரணானுமானமும் உடைய பகுத்தறிவுடைய மிருகமே மனிதன. இது நிற்க.

விலங்குகள் விருத்தியடையும் முறையும் விலங்கு மனிதனாய் அச்சுமாறிய முறையும் டார்வின கொள்கைப்படி கூறுதும். பூமியில் படைபடையாய் அடுக்கப்பட்டிருக்கும் மட்கண்டங்களிற் பதிந்திருக்கும் சாயல்களை நோக்கி, இன்ன காலத்தில் இன்ன விலங்கு இருந்தது ; இவ்

விலங்கு பலநூற்றாண்டுகளாக இன்னமாதிரி சாயலிலும் அமைப்பிலும் விருத்தியடைந்தது என நிச்சயித்தார். இம் மட்கண்டங்கள் பெரும் பாலும் ஆறுகளின் தொழிலால் முகத்துவாரத்தில் படைபடையாய் அடுக்கப்பட்டன. உயிர்நீங்கிய உடம்புகள் இவ்வடுக்குடன் அமைந்து காலக்கிரமத்திற் சாயல் பதிந்து அழிவெய்தும். பலப்பல மட்கண்டங் களை எல்லாம் ஆராய்ந்து வேதநுனுமானத்தால் இனம் வகுத்தபோது, மனிதன் குரங்கினத்திற் சேர்க்கப்பட்டான். மனிதவுடம்பின் அமைப்பு விலங்கியல்நூலின்படி இவ்வாறே வாலில்லா மந்தியின் உடம்பின் அமைப்புப் போன்றது. இவ் வாலில்லாமந்திக்கும் மனிதனுக்கும் இடையில் ஒரு மிருகம் இருந்திருக்கவேண்டும் என்றும் அவ்வச்சைக் காணேம் என்றும், அச்சாயலைத் தேடித்திரிந்தனர் டார்வின், கச்சிலி முதலியோர்.

இவ்விருத்திமுறை பாஷையுலகிலு முண்டு, நாதவுலகிலு முண்டு, இயந்திரவுலகிலு முண்டு, ஒழுக்கவுலகிலு முண்டெனக் கோர்பேட் ஸ்பென் சர் வற்புறுத்தினர். ஆதியில் ஒரே ஓசை இடையிடையே செவிப்புல னுறல், அதில் மக்கள் இன்புற்று இதுவே இசை; இதுவே சங்கீதமென்ப. ஓசையை மெலித்தும் வலித்தும் எடுத்தும் படுத்தும் நீட்டியும் குறுக்கி யும் பலவாறு ஒன்றுடன் ஒன்றைச்சேர்த்து இராகங்களை வகுத்து, ஓசையின்பம் விழைந்தனர். ஓசையே செப்பலோசை, அகவலோசை, துள்ளலோசை, தூங்கலோசை யென நால்வகைப் பாக்களில் நால்வகை யாய் அறியப்படும். மேலும் காலத்தின் வேறுபாட்டாற் பாக்கள் பா வினங்களாய்ப் பெருகின. இவ்வாறு சொற்களும் உச்சாரணபேதத்தால் மாறுவதுண்டு. மேலும் சொற்களின் குணவிரிவும் காலத்துக்குக்காலம் மாறுதலடையும். ஆதியில் ஒலியுண்டு. இவ்வொலிக்குறிகள் மொழிக ளாயின. மொழிகள் ஒன்று சேர்ந்து வசனமாகி விருத்தியடைவதை யும் நோக்குக. .... .... ஒரே கிளப்புக்கருவியாகிய மிண்டியை உப யோகிப்பது இயந்திர மெனப்பட்டது. பின்னர் இருமிண்டியைச்சேர்த்து வண்டிற்சில்லும் அச்சுமாகிய ஓர் இயந்திரம் செய்யப்பட்டது. இத் தகைய பல மிண்டியை உடையனவே தற்காலத்து யந்திரங்களெல்லாம். இனி ஒழுக்கத்திலும் மனிதனைக் கொன்று உண்பதே ஒரு காலத்தில் நல்லொழுக்கமெனப்பட்டது. பின்னர்ப் பஞ்சபாதகங்களை வரையறுத்து விலக்கினர். நாகரிகம் பெருக, அறங்களும் நல்லறங்களாய்க் கொல்லாமை,

ஒப்புரவு, பழமை, அருள் முதலியன வெல்லாம் நல்லொழுக்கமுறை யென ஒத்துக்கொள்ளப்பட்டன. ஒரே ஒழுக்கம் ஒருதேசத்தில் நல் லொழுக்கமாமென்றும், அத்தேசத்தினும் நாகரிகமடைந்ததேசத்தில் தீ யொழுக்கமாமென்றும், இன்னும் வேறோர்தேசத்தில் இவற்றினும் மேன் மையான ஒழுக்கங்கள் உண்டென்றும் ஒழுக்கநூல்வல்லுநர் கூறுவர். தேசத்திற்குத்தேசமும் காலத்திற்குக்காலமும் ஒழுக்கமுறை மாறிமாறி யிருப்பது என்பது ஒழுக்கநூற்றுணிபு. இஃதுணர்ந்தே ஒழுக்கம் ஒப்பற்ற நல்லொழுக்கம் என்றும் ஒப்புநோக்கிய இனநல்லொழுக்கமென் றும் வகுக்கப்பட்டது. ஒழுக்கமென்பது ஒப்புநோக்கிய நல்லது தீய தென மொழியப்படுவதால், உலகில் ஒழுக்கங்கள் எல்லாம் இன நல் லொழுக்கங்கள்: ஒப்பற்ற நல்லொழுக்கம் திறன் நோக்கிச் சிந்திக்கப்படுவ தால் அது சிந்தனையுலகில் (நினைவுலகில்) காரணனுமானத்தானே ஊகித் தறியப்படுவதொழிய, உலகில் உள்ளதன்று. இவ் வச்சுமாறுதலை நன் குணர்ந்த ஹேர்பேட் ஸ்பென்சர் விருத்தியின் வரைவிலக்கணத்தைப் பின்வருமாறு கூறுவர்:— "அமைப்பிலும் தொழிலும் பெயர் சாதி குண மறியப்படாத ஒரு பிழம்பு, பெயர் சாதி குணமறியப்பட்ட பல பொரு ளாய் விரிந்து, அமைப்பிலுந் தொழிலிலும் நுண்ணிதாகிப் பலவகை யாய் மாறுதல் அடைவது விருத்தி. விருத்திமுறைநோக்கிப் பல சாஸ்திரங்களையும் கற்று இம்முறைவழி உள்பொருளை ஆராய்ந்து, அறி யப்படும் உலகப் பொருட்களிலிருந்து, அறியப்படாத பரம்பொருளை அறியலா"மென்றார். அசிந்திதனாகிய கடவுளும் அறியப்படாதபொரு ளாயினும் ஒருவாறு அறிபொருளே.

இனிப் பிரான்சுதேசத்து டெக்காட் என்பவரின் ஆராய்ச்சியைக் கூறுதும். பலநூல்களையும் கற்றுப் பகுத்தறிவை மனம், சித்தம், புத்தி, அகங்காரத்தாற் பயிற்சிசெய்து அந்தக்கரணங்களைச் செவ்வி தாகத் தொழிற்படுத்தும் மனிதன் உண்மையை ஆராய விரும்புவான். அதற்கு அளவை வேண்டப்படும். வாயிற்காட்சியாகிய காண்டல் பொருந்திய அளவை எனின், இயலாது; வாயிற்காட்சி ஐயந்திரிபுடைத் தாகலான்; ஐம்புலவறிவு மயக்கமுடைத்து. ஐம்புலவறிவால் தோற் றத்தையே அறியலாம் ஒழிய, உண்மையை அறிய இயலாதென மலை யற்க. தோற்றத்தைத் தோற்றமென அறிவதே ஒரு உண்மை. காண்டல்

வழி யாம் அநுமிக்கும்போது ஐய விபரீதக் காட்சிகளை நீக்குதல் முடியும். இவ்வாறு ஆராய்ந்து, 'வாயிற்காட்சி உண்டாயின் அதை விடயிக்கும் சேதனன் உண்' டென்றார். "நான் சிந்திக்கிறேன், ஆகையால் நான் உள்பொருள்" என்பது டெக்காட்டின் உரைமொழி. வாயில்களை அதிட்டிப்பதும் காட்சிகளை ஒப்பிட்டு மானதக்காட்சிகளிற் சிந்திப்பதும் ஞாதுரு. ஞாதுருவின் அறிவு ஞானம். ஞானத்தால் அறியப்படும் பொருள் ஞேயம். உலகப் பொருள் எல்லாம் சித்து அசித்து என இருவகைத்தென்றார். இவ் அளவை காரியானுமானத்தி லடங்கும். சடப்பொருள் எல்லாம் புத்திதத்துவத்தான் அறியப்படுவன. புத்திக்கப்பாற்பட்ட பொருள்களை புத்தியால் அளவைசெய்து நிச்சயிப்பது தவறு,

இனி, ஜர்மானிய தேசத்து மகா தத்துவஞானி கான்ற் என்பவரின் சித்தாந்தங்கூறி இவ் அளவை முறையை முடிப்பாம்.

சித்தும் அசித்தும் விரோதமான பொருள்கள், இவற்றின் குணங்களும் மாறுகோளானவை; சுத்தப்பிரபஞ்சத்திலிருக்கும் பொருள்களைக் காண்டலாலும் கருதலாலும் அளவைசெய்தல் பிழை என்பர். கான்றின் தத்துவசந்தானத்தைச் சேர்ந்த கெசெல் பிக்டே முதலியோர் ஞாதுருஞேயத்திற்கும் சுத்தப்பிரபஞ்சம் அசுத்தப்பிரபஞ்சத்துக்கும் வேறுபாடு நீக்கி ஒற்றுமைகூற முயலுவர். ஞாதுருவும் ஞேயமும் ஏகநிலைநிற்றலே உண்மை. அறியப்படாத நிர்க்குணனாகிய கடவுளது தன்மை இதுவே போலும். ஞாதுரு ஞேயமாகிப் பேதமின்றிநிற்றலே உண்மை. மற்றைச்சித்தாந்தமெல்லாம் மயக்கவுணர்வு. இவ்வுண்மை புத்திதத்துவத்திற்கு மேலதாகையால் யோகக்காட்சி காரணமாய் உண்மையுணர்ந்த முனிவர்கள் கூறும் உரையளவையால் அறியப்படும், இந்நிலை உவமானங்களால் விளக்கப்படும். எமது அளவைகள் காலத்திற்கும் இடத்திற்கும் அடங்காத நினைவுலகப் பொருள்களை ஆராயாது. நினைவுலகப்பொருளைப் புத்திதத்துவத்திற்குக்கீழ் அடங்கிய தத்துவங்களை அதிட்டித்து அளவைசெய்தல் பொருந்தாது. புத்திதத்துவத்திற்கு அப்பாற்பட்ட பொருள்களை எமது அளவைகளால் ஆராய்வது தவறென்றார் கான்ற். ஒரு வருணத்தின் ஆசாரப்படி ஒழுகுபவனை வேறோர்வருண ஆசாரமுறைப்படி தீயனென்பது பிழை. நினைவுல

கத்தைக் காரணானுமானத்தால் அளவைசெய்ய முயலுவதொழிய, எமது அளவைகளால் உண்மை அதுவென நிரூபிக்க இயலாது. கடவுளும் தத்துவங்கடந்த பொருள், காண்டலாலும் கருதலாலும் அறியப் படாத பொருள். இப்பற்றற்ற நிருவிகாரியாகிய கர்த்தழியை உண்டென் றும் இல்லையென்றும் நிரூபிக்க இயலாது. கடவுளின் அருட்சக்தியை உணர்ந்து ஒருவாறு கடவுள் உண்டென்று உணர்வோம். இங்ஙனம் தம்மை யுணர்ந்தார் தம் கடவுளரையும் உணர்ந்தார் என்பதும் வலி யுறுத்தப்பட்டது. தம்மை யுணர்ந்தார் 'தத்துவமசி' என்னும் மகா வாக்கியத்தினது உண்மையையும் உணர்ந்தாராவர். எவ்வாறுயினும் கடவுள் சகுணனன்று, நிர்க்குணன் எனத் துணியப்படும். கார ணானுமானமே எல்லா அனுமானங்களினும் சிறந்ததென்பது வெளிப் படை.

பலாது சித்தாந்தங் கூறி அளவைமுறை கூறினோம். மேனுட் டில் ஒவ்வொரு சாஸ்திரத்தின் முறையையும் ஆராயும் முறையே ஒரு சாஸ்திரமாகும்.

முன்னுரை முற்றிற்று.

[தொடரும்.]

த. இராமநாத பிள்ளை,
பரமேசுவரக் கல்லூரி ஆசிரியர்,
யாழ்ப்பாணம்.

---

ஸ்ரீ:

திருக்குருகைப்பெருமாள்கவிராயர்
இயற்றிய

# [1] குருகைமான்மியம்.

## வாழ்த்து.

1 வாழி வாழிநா னிலமுழும் மாரியின் வளனும்
வாழி வாழியில் லறமுநல் லறப்பெரு வனப்பும்
வாழி வாழிநா லாயிரப் பனுவனுன் மறைநூல்
வாழி வாழிசீ பராங்குச வாணைவை கலுமே, (க)

## காப்பு.

2 பூத்ததா மரையயன் படைக்கப் பொற்புடைக்
கூத்தனு கியசிவன் றுடைக்குங் கொள்கைசே
ரேத்துதற் கரியபல் லுலகை யின்புறக்
காத்தமால் குருகைமான் மியத்தைக் காக்கவே. (உ)

## குரவனைவாழ்த்தல்.

3 வாக்கி யாயத னுற்பயன் பரனையே வழுத்து
நாக்கி னுன்மனி தரையுமேத் தாதனு னமதுண்
டாக்கி யாரிய னெனவெதிர்ந் தரியபே தமையு
நீக்கி யோன்கரு ணையைப்புகழ்ந் திருக்குரன் னெறியே. (ங)

---

[பிரதிபேதம்] [1]குருகாமான்மியம் என்று சங்கத்துப்பிரதியிற் காணப்படுகிறது.

## பதிகம்.

4 பூவாகி நன்மணமாய்ப் பொன்னு கியுமொளியாய்ப்
பாவா கியுமிசையாய்ப் பாலாகி யுஞ்சுவையாய்
மேவா ருயிர்க்குயிராய் வேறுவே ருகிநின்ற
மூவா முழுமுதலின் மூதா ரறிவாரே. (க)

5 *வெங்கோப மால்யானை விண்பகவே மூலமெனப்
பொங்கோ தையையுணர்ந்த தத்துவனும் புத்தேளிர்
தங்கோ னனைத்துருவுந் தானான சாரூப
வெங்கோ னவனல்லால் யாரோ விறைநிலையே.[1] (உ)

6 கடியார் பசுந்துளவக் கார்மேனிச் செங்க
ணெடியானை யெட்டெழுத்தாய் நின்றானைப் புள்ளின்
கொடியானை யென்னுளத்துட் கொண்டானை யேத்து
மடியா ரடியா ரடியா ரடியேனே. (ஙு)

வேறு.

7 முந்த நான்முக னிறைவனு ணர்ந்தருண் முதனூலைச்
செந்த மிழ்ச்சது மறையெனச் செவிக்குமின் னமிர்தென்னத்
தந்த மாறனிங் கெனதுளா வினுமிது தழைசால்பால்
வந்த வாழ்வினை நினைதொறுங் களிக்குமென் மனமன்னே. ()

வேறு.

8 எழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரமென் றிசைத்தே
வழுத்து மஞ்சதி காரமு மாசறுத் தறியேன்
பழுத்த பாவலர் பாதபைங் கமலமென் முடிமே
லழுத்து நன்னெறி யாசறக் கற்றதே யறிவேன். (ரு)

9 தீது ணர்ந்தசொற் பேதைநீ தீதுறூர் முன்னம்
யாது ணர்ந்திதற் கிசைந்தனை யெனிலிய லிசைநூன்
மூது ணர்ந்தநன் புலவர்வா ழுலகின்மு துணராக்
கோது ணர்ந்தபுன் புலவனு முளனெனுங் குறிக்கே. (சு)

---

*இப்பக்கத்தும் பின்வரும் பக்கங்களிலும் *இவ்வடையாளமிடப்பட்ட செய்யுட்கள் மாறனலங்காரத்தின் எடுத்தாளப்பட்டவை.

[பி-ம்.] [1]இச்செய்யுளின்பின் 'இது பொருள்விலக்கலங்காரம்' என்று ஒரு குறிப்புச் சங்கத்துப்பிரதியிற் காணப்படுகிறது.

வேறு.

10 தன்னிகரொன் றில்லாத தத்துவநான் மறைத்துணிவு
தன்னைத் தேரும்
[1]பொன்னிதழ்ப்பங் கேருகமென் பொகுட்டிருந்தோன் முதலாய
புனிதர் கூறத்
தொன்னலஞ்சேர் சுடராழித் தனியுருவம் பலவுருவாய்த்
தூயோர் போற்ற
முன்னியபரன் மைத்தலமாங் கேத்திரங்க ளனைத்தினையு
முற்ற வாய்ந்தே. (௭)

வேறு.

11 திடனுடைப் பராச ரன்றன் சேய்வியா தனுக்கு ரைத்தாங்
கிடனுடை வியாதன் றன்சே யெனுஞ்சுகற் குரைத்த முன்னை
வடமொழிப் பனுவ லாய குருகைமான் மியத்தை மண்மேற்
படர்புக ழாதி நாத பட்டர்தா மூரைப்ப வுற்றேன். (௮)

வேறு.

12 இருக்குமுதற் பனுவலினு லியற்றமிழ்தேர் நாவீற
னென்னு மேன்மை
யருட்புயலைப் புகழ்புலமைத் திருக்குருகைப் பெருமாள்பே
ரன்பு கூருந்
தருக்குலவும் பொழிற்குருகா புரிவணிகன் சடையனிதைத்
தமிழாற் சாற்றித்
திருக்குருகைப் பெருமாள்வண் கவிராச னெனப்புனைபேர்
சிறந்த தொன்றே. (௯)

வேறு.

13 அறந்திகழாண் டவையெழு நூற் றிருபான் மூன்றி
லணிகிளர்கார்த் திகைமாத மெட்டில் வாழ்வு
சிறந்திடுதிங் களினுளுத் தாத்தி லேகா
தெசிமகா முகுத்தமிவை திருந்த முற்றத்
துறந்தவரொண் மகிழ்மாறர் திருமுன் னுதிச்
[2]சுருதியுடன் மிருதியுஞ்சொற் றமிழின் வாய்மை
பிறந்தபெருங் காப்பியமுன் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுட னரங்கேற்றப் பெற்ற தன்றே. (௧௦)

---

[பி-ம்.] [1]பொன்னிதட்பங். ச. [2]சுருதியுப நிடதமுஞ்சொற். ச.

### வேறு.

14 அந்த வான்புன லண்டம்யா வையுமகத் தடக்கு
முந்த நாளையின் மறித்தும்வே தியன்றனை முதலோன்
றந்த வாய்மையு மவன்படைப் பினிற்சக மனைத்தும்
வந்த வாய்மையு மருந்தவ [1]மயன்புரி வனப்பும், (கக)

15 கனிவி னுலவன் வெளியில்வந் தொருபெருங் கடவு
ளினியி யற்குரு காபுரி வருகவென் றிசைத்தே
புனித னைச்சது முகனவ னருச்சனை புரிநாட்
டுனிசெய் தாந்தனுக் கெந்தைவீ டருளிய தொடர்பும், (கஉ)

16 தத்து வம்பெறு முனிவர்வந் தருள்வழாத் தாந்தன்
முத்தி பெற்றநற் றலத்தையுந் தெரிசியா முதலே
நத்தி னத்தொடு நகரினை வலம்புரி நலனுஞ்
சித்த மெய்த்தவ ரவண்விளங் குதற்குவார் திறனும், (கங)

17 வழுக்கு மும்மதக் களிறுமோர் வேடனு மலைந்த
வொழுக்கு மன்றவண் வசிட்டன்வந் துறுதலு மூரவோ
ரழுக்கி லானொடு முபயதா னமுமுணர்ந் ததற்பின்
விழுத்த வம்பயில் சலஞ்சலம் வலஞ்செயல் வினவா, (கச)

18 உம்பர் கோன்முத லாயவெண் மரிலுயர் வுறுவான்
சம்பு நன்னதி யடைந்தவே தியனொரு சங்காய்ப்
பம்பும் வாரிதிப் பிறந்திவண் வலஞ்செயும் பான்மை
யெம்பி ரான்பதம் பெறற்கெனுப் பெற்றத னியல்பும், (கரு)

19 மும்மை யாமுகங் கழிந்தபின் கலியுக முதலுஞ்
செம்மை நாளையிற் பச்சைமால் காரியார் சேயாய்
நம்மை நாம்புகழ் வாம்வரு குவமென நவின்றே
யெம்மை யாண்டவன் புகழ்ச்சட கோபனு மியல்பும் (கசு)

20 வேத நாலையு நால்வகைப் பனுவலாய் விரித்தே
நாத னாகிய சுடரின்முன் சுடரென நயந்தோன்
றுதல் வாய்மையும் பதின்மரும் வீடுபெற் றமைநற்
போத வாய்மையும் விரித்தினி யொருவகை புகல்கேன். (கஎ)

பதிகம் முற்றும்.

---

[பி-ம்.] [1]மவன், ச.

## ௩. நாடுவாழ்த்துச்சருக்கம்.

21 திருமகளும் புவிமகளும் பொதுவர்குல மகளெனப்புத்
தேளிர் போற்ற
வருமகளுங் கலந்தாடும் பேரின்பக் கடலான
மாயோன் வைகும்
பொருமகரக் கடல்வளைத்த பூதலத்துட் சிறந்ததெனப்
புண்ட ரீகப்
பெருமகனூர் புகழ்திருநாட் டினைச்சிறியேன் புகழ்வதற்கென்
பேசு மாறே. (௧)

22 தொழுதியாய் வரியளிசூழ்ந் தெழுதவள மலர்மகளாற்
ரேற்றஞ் சான்ற
பழுதில்கேள் வியர்பனுவற் றுறைதொறு[1]நாட் டணியினைத்தாம்
பாடிப் பாடி
யெழுதிரா டொருமமைத்தற் கிலக்கணமாம் படிக்குவள
னெல்லாம் வாய்ந்து
வழுதியாற் புனிதர்திரு வழுதிவள நாடெனப்பேர்
மதிப்ப தாமே. (௨)

வேறு.

23 விளையுள் யாவையும் நவையிலாப் பருவத்தின் வித்திக்
களைக ணூற்பயன் விளைப்பவ ரினும்பலர் கற்றோர்
கிளைசெய் தொல்குலத் தினும்பல ரெதிர்ந்துமண் கிளைத்தே
வளையு மாதுலர் முகமலர்த் தியகொடை வளத்தார். (௩)

24 அந்த ணாளரை முதலியோர் வாய்மைகூர்ந் தறஞ்சார்ந்
துய்ந்த சிந்தைய ராதலி னுறுப்பெரும் [2]பெயல்போல்
வந்த ருதெதிர் மூவகைப் புனலினெவ் வளனுந்
தந்த சால்புட னேனைநாட் டவர்விழை தகைத்தே. (௪)

25 ஆற்று நீருயர் மாரிநீர் கழனிசூழ்ந் தழகா
ரூற்று நீர்நறு மலர்த்தட மதியக டுரிஞ்சுஞ்
தோற்ற மேயமால் வரைக்குலம் பொன்மதில் சுலாய
வேற்ற மேயநீ ணகர்களா முறுப்பிணு னியையும். (௫)

---

[பி-ம்.] [1]நாடணி என்று மஹாமஹோபாத்யாய ஸ்ரீ வே. சாமிநாதைய ரவர்கள்பிரதியிற் காணப்படுகிறது. [2]புயல்போல். சா.

26 அன்பு வாய்மையொப் புரவுவே ளாண்மைதா ளாண்மை
புன்பு லங்களிற் பொறியுருப் பொறைநிறை புரிந்தே
துன்ப மென்பது புறந்தரக் கடவுளைத் துதிபே
ரின்ப மார்தரின் னுயிரதாய்த் தழைபியல் பினதே. (சு)

27 மூர்த்தி யாந்திரு மான்முதன் முதல்வரா முதன்மைத்
தீர்த்தர் வாழுநற் றானமுந் தானமுஞ் சிறந்தே
கூர்த்த நுண்ணறி வினர்களாற் கொழுந்துவிட் டெழுந்த
கீர்த்தி யாமணி யணிந்தணி கிளர்கெழு தகைத்தே. (எ)

28 பாப்பு நீர்த்தடத் திரவல ரன்றியப் பரப்பி
னிரப்பு றுமையி னிரவல ரிலரெனு நெறித்தாம்
புரப்ப தன்றியெவ் விடத்துமெப் பொழுதுமெப் பொருளுங்
கரப்ப தாங்குண நனவிலுங் கனவிலு மறியார். (அ)

29 அற்ற முற்ற[1]பொழ் தாறலைக் குனர்கள்வேந் தலைப்போ
ருற்ற வர்க்கிட ரிழைக்கவுட் பகையதா யுறைவோர்
சுற்ற முற்றவுங் குழீஇத்தனிக் குடிதுய ருழப்பான்
செற்றம் வைத்திகல் விளைப்பவ ருறுதசெவ் வியதே. (க)

30 கூற்று டன்றிகற் கெதிரினு மதனைவெல் கொற்றத்
தாற்றன் மேயமாண் படையுள வாசனோ டமைந்தே
போற்றன் மேயது மறிதிரைப் புணரிசூழ் புவிமேன்
மாற்றம் வேறிலை யாமென மதிப்பதாம் வகைத்தே. (க0)

31 ஈன மேயவன் பசிபிணி யிகலதொன் றின்றாய்
வான மேயவர் விழைதரு திருவின்வை கலுநற்
றான மேயது விழாவும்வேள் வியுந்தழை தாலாய்
ஞான மேயவர் சிந்தைபோன் றின்பமே நல்கும். (கக)

32 வெள்ளி டைத்தல மென்பதொன் றின்மையாய் விராய
புள்ளி வண்டிமிர் பொழில்களிற் புதுவதாய் நாளுந்
துள்ளி வீழ்நற வுடனளா யொழுகுதீஞ் சுனையை
யள்ளி யுண்டிளைப் பாறுவா ராறுசெல் பவரே. (கஉ)

---

[பி. ம்.] [1]போ தாறலைக்குனர்கள், சா.

33 ஒப்ப நிற்றலை யொரீஇபவா யூதையா தியதா
மெய்ப்பு லத்துவெங் கோய்செய்யா வகைவிதித் தமைத்த
மூப்ப மூச்சுனை புழுகளாய் முழுகுபூஞ் சுனைக
ளெப்பு லத்தினும் யாவர்மாட் டினுமிலைப் துளவே. (கங)

34 மாவும் வண்சிறைப் பறவையும் வரம்பிலா மற்றை
யாவும் யாவரு மிகலற யாண்டுமெஞ் ஞான்று
மேவு வாய்மையின் விழைபவர்க் குணவுமெய்த் திருவு
மோவில் பான்மையி னுடலா துதவுவ தொருங்கே. (கச)

35 வேலை வாய்ப்படிர்ந் தெழுமுகிற் கணந்தவழ் மென்பூஞ்
சோலை வாய்க்குடம் பைகடொறு மோதிமஞ் சுடாய்
மாலை வாயமைப் பதுநதி நறவளாய் மதர்த்த
காலை வாய்த்தலை தொறுங்கொழித் தெறிகதிர் மணியே. (கரு)

36 மாம ரப்பணை பலவினெண் பணையொடு மயங்கிக்
காமர் தீங்கனி களும்விராய் நாகிளங் கமுகி
னேம நன்பழுக் குலையொடுஞ் செவ்விள நீரும்
தாமி டைந்துபா னுவின்கதி ருள்புகாத் தழைத்தே. (கசு)

வேறு.

37 சந்தனப் பொதும்பர் சூழ்ந்த சண்பகப் பொதும்ப ருள்ளா
யிந்திரன் விழைவ தொன்று மினமலர்த் தடத்தின் பாங்கர்
பந்தர்பா ரித்த மாவும் பூகமும் பலவு நாப்பண்
மைந்தர்மா தரின்வாழ் வெய்தும் வசந்தமண் டபங்கண் மன்னே. (கஎ)

38 முருகுகருக் கமல மென்பூ முகையவிழ்ந் தருத்த தீந்தேன்
குருகருப் பொய்கைத் தெண்ணீர் மிசையுறக் குழூஉச்செய் தண்டை
பருவரா லுடனே வாளைப் பகட்டின மூளக் கிண்ட
மருவுறுப் பொங்கர்த் தீந்தேன் வழிதரு நதியே யெங்கும். (கஅ)

39 அறுசுவைத் தாய வுண்டி யாதுலர் நினைவிற் றேய்ந்த
வுறுசுவைத் தாக நாளு முயர்ஙள பாகத் தேந்தி
மறுசுவை விரும்பா வண்ண மாசிலாக் கல்வி வேண்டப்
பெறுசுவை விழைவா ரூட்டும் போறச் சாலை யெங்கும். (கக)

வேறு.

40 *வசையி லாவிர சதத்தினல் வயின்வயி னமைத்த
வசைவி லாப்பனி வரைக்குல மளவிடற் கரிதாந்
திசைக ளெங்கணுஞ் சென்றிடம் பெறுதவா மதன
திசைக [1]ணின்றவ ணவண்செறிந் தோங்கிய தெனும்பார். (௨0)

41 கோடு வான்றொடக் கொழும்பொன்னுற் குயிற்றிய குன்றின்
மாடு கின்னரர் மிதுனமெய் தலுமருங் கிருந்த
நீடும் யாழ்கவர்ந் திரியல்போய் நரம்புளர் நெறியாற்
பாடு வார்கிளை யாயின கவிகளென் பகர்வேன். (௨௧)

42 மைந்தர் மாதரோ டியற்கையின் மணந்தகா லையின்மெய்
நைந்த விழ்ந்திடு மளகபந் தியினறு மலர்வாய்ச்
சிந்து கற்பக நறுமல ரையுந்தெரித் தணிவா
ரந்த நாண்மலர் மறைவெளிப் படுத்துவ தறிந்தே. (௨௨)

43 பருமு ணிக்கலன் மெய்யுறுத் துவதூறீஇப் பாங்கர்
மருமு லர்த்தவி சிடையிடா மணந்த [2]கா லையிலக்
குறுமு ணிக்கலன் கோடரங் கோடகத் துய்ப்பப்
பொருவில் கற்பகம் பொருவரு மாயிடைப் பொழிலே. (௨௩)

வேறு.

44 அடிவரை படிகத் தாற்றி யரும்பொன்னு லிந்த்ர நீலக்
கடிமணி களினுற் செய்ய கதிர்மணி களினு லும்பர்
வடிவமைத் துயர்ந்த குன்றின் மாமைதாய் வளர்நல் யானை
படியுளார் சமயத் துட்சிற் பானையே பொருவு மாதோ. (௨௪)

வேறு.

45 †நெடுவான் கலைவயிரத் திழைத்தபருப் பதக்குடுமி நீவ நாளு
மோடுவான் மதியகட்டி[3]னுறுபிணைதற் பிணையெனக்கொண் டும்பர் வாவக்
கோடுவார்ந்திழிதருதெள்ளமிர்தவ நவிபிற்குழுமிக்கொடியன்னரோ
யாடுவார்மைந்தருமுண்டுண்பதுமத்தெள்ளமிர்தேயவர்களுனும். ()

---

[பி-ம்.] [1]ணின்றவண் செறிந்தடங் கியதென லாமே என்பது மாற னலங்காரத்துக்கண்ட பாடம். [2]மாலையிலக். சா. [3]னுறுபிணையைப்பிணையெனக் கொண் டும்பர் வாவ என்பது பாப்பாவினத்துக் கண்ட பாடம்.

†இப்பக்கத்தும் ‡பின்வரும் பக்கங்களிலும் †இவ்வடையாளமிடப்பட்ட செய்யுட்கள் பாப்பாவினத்தள் எடுத்தாளப்பட்டவை.

வேறு.

46 ஒருகை பற்றி விடாதிருந் தொருகையா லமிர்துண்
டிருகை யாலணைத் திலகித முமிர்துமாந் தினராய்க்
கருது பேருணர் விழந்துட லுயிரொடுங் கலந்தே
பொருவி லுத்தர குருவினுள் ளாரெனப் பொலிவார். (உசு)

47 வானு லாமதி முகநெகிழ்ந் தோட்டமேய் மருந்தார்
தேனு லாமலர்க் குழலியர் மதிமுகஞ் சிவணிப்
பான மாமென வோட்டமேய் மருந்தையும் பகுத்துண்
டான பான்மைநா டரியவா யடிக்கடி யயில்வார். (உஎ)

48 ஒவி யந்தளிர்த் துயிர்படைத் தனையதொன் றெனலாங்
காவி யங்கண்மங் கையர்மனைக் கடிவளை யரவங்
கோவி லெங்கணும் வலம்புரிக் குலங்குளி றரவம்
வாவி வாய்த்தவழ் சூல்வளை யரவத்தின் மயங்கும். (உஅ)

49 தொட்ட தொட்டவத் துறைதொறுஞ் சோதியாந் திருமான்
மட்ட ருமலர்ப் பொகுட்டுளான் படைப்பலா வகையா
யிட்ட காமிய முத்தியென் றிரண்டுமிவ் வுலகிற்
சிட்டர் தாம்பெறப் படைத்ததொன் றுமதன் சிறப்பே. (உகூ)

50 ஈட்ட வெண்டிரைப் பரவைசூ ழிருநிலத் தெதிராய்
நாட்ட மற்றொரு நாடிலா மையினயந் தெடுத்துக்
காட்ட தாமெனக் கனகநா டதனையுங் கற்றோர்
கூட்ட முற்றுணர்த் திபதியார் யாதெதிர் குறிப்பார். (௩0)

வேறு.

51 சிறகுளவாங் கயிலைமலைக் குலமெனமுன் னீர்பருகிச்
சேமஞ் சானு
மிறகுளவாய்ப் பொனங்கொடியுட் படர்நீல கிரியெனமின்
னெறித்து மீள்கார்
நறவுளாச நுழைகுழலிப் பிறையிணைக்கோ டுழவயிர்த
நறவி ஞோடுர்
துறவுளர்வா னவர்புகழ்முத் தமிழ்ப்பொருப்பிற் பதிந்துபுனல்
சொரிந்த தன்றே. (௩௧)

### வேறு.

52 *பதியுமா முகில்கரிப் படாமு மாய்ப்புன
னதியுமாய்ப் படுகதிர் நான்ற வேணியாய்
மதியமா முளைமதி மதிய மாய்த்தமிழ்ப்
பொதியமா னதுசிவன் போலு மானதே. (௫௨)

53 *உந்தியங் கமலமே லுதிப்ப தாலுஞ்
சிந்துதெள் ளருவிவெண் ணூலின் செம்மைத்தாய்ப்
பந்திசேர் திசைமுகம் பயிலும் பான்மையாற்
சந்தமால் வரைமறைத் தலைவ னொத்ததே. (௫௩)

54 *விண்டுவென் றுரைப்பதால் விண்ணி னோங்கியே
பண்டுல களந்தமெய்ப் படிவங் கூர்ந்தடிக்
கொண்டநீர் பகிரதிக் கோதை யொத்ததால்
வண்டுழாய் மிலைந்தசெம் மலையு மொத்ததே. (௫௪)

55 மாற்கமு தெனமகிழ் மாற னீந்தநன்
னூற்கட லாய்ந்தநுண் ணுணர்வி னுலுயர்
நாற்கவிப் புலவர்மெய்ஞ் ஞானம் போலவும்
பாற்கடல் போலவும் பரந்த பாணியே. (௫௫)

56 வருமுகம் பலவதாய் வழிந்த மாரிநீர்
செருமுபைங் கழைவனந் திரைக்கை யாற்றிரைத்
தொருமுகம் படக்குழீஇ யொழுகு மொய்யெனப்
பெருமிதப் பொருநையெம் பிராட்டி யென்னவே. (௫௬)

57 பாலைவாய்க் கொண்டதன் படிவ மாற்றலாற்
சோலைமால் வரைமுதல் சுழிக்கும் வெண்டிரை
வேலைவீ ழுய்நிலம் விளங்கும் பான்மையோர்
நாலையே யுண்மையாக் கியது நாரமே. (௫௭)

58 ஏனமென் கிடம்புலி யாளி நீர்வளைத்
தூனமுற் றனசில வுரு திரிந்தன
கோனாண் கொளச்சிலர் குறும்பு ளாய்ச்சிறைத்
தானமுற் றிடவுரு தவரு மானுமே. (௫௮)

59 படிப்புலத் துள்ளமன் னுயிர்க்குப் பையுள்கூர்
மிடிப்புலந் தீர்க்குநீர் வேங்கை வேங்கையின்
முடிப்புலக் கொடிதழீஇ யிம்பர் முன்னியோர்
கொடிப்புலி யென்பதாய்க் கொம்பர் தோய்ந்ததே. (ருகூ)

60 ஓட்டரும் புனற்சுழி யுழைப்பட் டாழ்ந்துபார்
தோட்டகோட் டொடுநிமிர் துளைக்கை மால்வரை
நாட்டமா சையன்கொடு காந்த நானிலங்
கோட்டிடைக் கொண்டெழுங் கோலம் போன்றதே. (சo)

வேறு.

61 †வாளி பின்செல முன்செலு மறிபுன லொழுக்கத்
தாளி பின்செல முன்செலு மடுகளி றந்தோ
கோளில் வான்பிடி குறுகலும் புணர்ச்சியுட் கொளலால்
வேளின் மேதகு பெருவிறல் யாவரே [1]விளைப்பார். (சக)

62 †அடனி லாதர ணிழந்துளார் யாவரே யானு
மிடனி லாரிடைப் பணிபவ [2]ராவது மெய்யே
யுடனி லாதவாய் ஞாளிமுன் பிரிநரி யுறுநீர்ப்
படரு மாகளிற் றெருத்ததாய்க் களித்தது பாய்ந்தே. (சஉ)

63 †இறைவ னுலலைர் திரியல்போ குநரிறை மையிலாச்
சிறைவ லாருழைச் சாண்புக வுடனிரி திறனென்
றறைவ தாம்புன லலைக்குமா ளிகடுதிக் கையினத்
துறைவன் மாமுத றழீஇயுட னிரிதரு தொடர்பே. (சங)

64 கோல நீர்வளை திடரிடை யதனுரீஇக் கூலத்
தாலம் வீழ்தழீஇ யும்பர்வான் சினைபுகு மாவந்
தூல காயம தொரீஇயமுத் தரைக்காந் தூண்டி
மேலை வானவ ரெடுப்பவின் புகுவபோல் விளங்கும். (சச)

65 †கலங்கு பாய்புனல் கடிந்தெழக் கவட்டொடு மலங்கப்
புலங்கொ டாருவிற் புட்குலம் போகலா திரைத்தல்
குலங்க டாங்குநர் நடுக்குறக் குலத்துளா யவர்பா
னலங்கொள் வார்குழீஇக் கலுழ்வதே போன்றது நவிலின். ()

[பி-ம்.] [1]விளைத்தார். பா. [2]ராமெனன். பா,

### வேறு.

66 கொடுவரிக் குருளையு மெண்குன் கோட்டுமோட்
டடுபுழைப் பனைக்கைமா களிறு மாளியு
நெடுமருப் பிரலையு நிலைபெ ரூதெழப்
படுதிரைக் கரங்களாற் பார்க ரெற்றியே. (சசு)

67 வல்லைவான் புறவினுட் பாந்து மாசிலா
முல்லைமென் மலர்ப்படாம் போர்த்து முன்னுறு
தொல்லைவான் குடிமடத் தோகை தோன்றிய
வில்லினின் றிறைவனிற் சேற லேய்க்குமே.[1] (சஎ)

68 உருட்டுபொற் கடமுடைங் தொழுகு மேரியுண்
முருட்டுமா மாமுதல் கிளைத்து முல்லையிற்
சுருட்டிநாட் டலுந்துணர் துமித்தல் சோதிவான்
பொருட்டன்னுட் கடைந்தமிர் தெழுதல் போன்றதே. (சஅ)

69 †அறைபொரு தமிழ்தரு மணியைத் தாருவை
நறைமரை [2]யினைக்கபி லையினை நாகினைத்
துறைதொறுஞ் சுழித்தெறி தொகுதி பாற்கட
னிறை[3]யமிர் துயிர்த்தபல் வளநி கர்க்குமே. (சகூ)

70 மும்மைநூ லுணர்ந்துறு புணர்வின் மூழ்கினோர்
மெய்ம்மைவீ டவைதர மேய்தல் மானுவ
தம்மினு மமிர்தின்மூ வினமுந் தாழ்தரா
வும்மினென் றவைதிட ருருவி னுய்ப்பதே. (ரு0)

71 நிதியசும் புடன்வரை மணிக ணித்திலம்
புதியமென் மலர்புன லூர்தொ றுய்ப்பதா
னதியதாய்க் கற்பக நாக நீத்துமண்
பதியதாய்க் கொடைவளம் பயில்வ தேய்க்குமே. (ருக)

72 †தாங்கவான் புனலிரு கரையுந் தாக்கலின்
மரங்கடா மசைந்தல ருகுத்தல் வாழுமெம்

---

[பி-ம்.] [1]இச்செய்யுளின்பின் இரண்டுந் துடர் என்று ஒரு குறிப்புக் காணப்படுகிறது. சு. [2]வளக்கபி லையினை. பா. [3] யமிழ் துயிர்த்த. பா.

முரங்கெடா தளித்தியென் றுள்ளிக் கொம்பராங்
கரங்களாற் பனிமலர் [1]கவிழ்த்த [2]தொத்ததே. (௫௨)

73 துறைதொறும் பழுதெணுச் சூழ்ச்சி மந்திரத்
துறைபவ ருரையுணின் றொழுகு மன்னன்போன்
றறைபுன லொழுகிய தடங்கி மள்ளர்நோன்
பறையொடுந் துறைதொறும் பாந்த காலையே. (௫௩)

74 †மண்ணக மடந்தைதன் வரம்பை வான்புனற்
பெண்ணா சழித்ததென் றுலகம் பேசுமா
றெண்ணியே யளவினுக் கெங்கு மார்த்தியா
யுண்ணுநீர்க் கடலையு முததிக் கீந்ததே. (௫௪)

75 †புக்கமா நதிக்கெதிர் புணரி மாமணி
யொக்கவே [3]கொழித்திட லுததி நாயகன்
மிக்கநா யகியென விரைந்து பாதகா
ணிக்கையாய்த் திரைக்கரத் திடுதல் போன்றதே. (௫௫)

76 ஓங்குமா நதிபுக வுறுபன் மீனொடு
நீங்கிவெண் டிரையிடங் கொடுத்து நிற்பன
வீங்குநீர்ப் பெண்ணா செய்திற் றென்றிரு
பாங்கர்சே வகருறும் பகுதி யேய்க்குமே. (௫௬)

77 கடிதொடுஞ் சந்தனக் காமர் தென்மலைப்
படிதொடுத் தலைதொடும் பாணி பார்மகண்
முடிதொடுத் தணிதனி முல்லை மாலிகை
மடிதொடுத் திலகிய வனப்பை மானுமே. (௫௭)

78 †மடைதிறந் தொழுகுநீர் வாவி வாய்ப்புக
மிடைதிறந் தருமர விந்த நாண்மலர்
புடைதிறந் ததுமலர்ப் பூவை பொன்னிதழ்க்
கடைதிறந் தெதிர்கொள நினையுங் காட்சித்தே. (௫௮)

---

[பி-ம்.] [1]கவிழ்ப்ப தொத்தவே. சு. [2]போன்றவே. பா. [3]தெளித்திட. பா.

3707



வேறு.

79 வாளைப் பகடு புதுப்புனல்வாய்
மடுத்து மடுவின் மதர்த்துமடை
யாளைச் சினவிப் புடைவிழவா
லறைந்தே யுகளித் தழிநறவுண்
பாளைக் கமுகின் மணிமிடற்றுப்
பசுங்காய் சிதறித் தருவின்முதற்
றாளைத் தடிந்தம் பாரதிநீர்
தன்னிற் குளிக்குந் தகைத்தொன்றே. (௫௯)

வேறு.

80 கார்காலம் வருவதன்முன் கனல்காலத் தெதிர்கோலிக்
கணிதர் நெஞ்சிற்
கோர்கால நினைந்துழுத புழுதியினில் வித்தியசெய்
யிடங்கள் யாவு
நீர்காலக் குறுமுளையுங் காலுமது கண்டெழில்கூர்
நெடிய மேனி
வேர்கால விரைந்தோடி யுழவர்குழீஇக் கழனிதொறு
மேயி னாரே. (௬0)

81 மருந்தெனுமா னிடப்பிறப்பிற் கல்வியும்வாய் மையுங்குலனும்
வனப்பு மெஞ்சாப்
பெருந்திருவு மனைவியுநன் புதல்வருஞ்சுற் றமுமினியோர்
பிறப்பிற் சேர்வான்
பொருந்தியவிப் பிறப்பிலியற் றியதவத்தாற் றிரட்டியபுண்
ணியமே போலத்
திருந்தியவார் கழனிதொறுஞ் சுமந்துகுவை படமெருவைச்
சிதறி னாரே. (௬௧)

82 கொழுப்படையி னுதிக்கொழுவி னுகத்துளையுட் செறித்தகழி
கோலை யேரின்
விழுப்பிடரிற் பிணித்தயிரா பதப்பிடரிற் குலிசனையும்
விருப்பின் வேண்டி

பெழுப்புணருந் திரண்டபுயத் திளையார்கள் விளையாட்டி
னெங்கு மீண்டி
முழுப்பினுட னுழும்பகுதித் தொகுதியையா மளவுசொல
முடியா தன்றே. (சுஉ)

83 *பூட்டியுழுங் கருமேதி யரிதாளிற் கருங்குவளைப்
போது மேயத்
தீட்டியநா வினைக்குறுக்கிச் சிறைவண்டின் பண்ணமுதைச்
செவியா லுண்டு
மோட்டுமுது முலைக்கண்மடை திறந்தொழுகும் [1]பாலமிர்த
முழங்கி யாம்பற்
காட்டுவரம் புடைப்பவயற் கழனியடைத் துழவருழுங்
காட்சித் தாமே. (சுங)

84 வீறுபடும் பணைமருப்பிற் பகடுகடா யிருபுடையும்
வெண்சங் கார்ப்ப
மாறுபடப் படர்முல்லைக் கொடிப்படையின் னணியாம்பன்
மதமா வாகங்
கீறுமுடக் குகிருழுவைப் போணியம் புரவலர்தாள்
கிளா நாளுஞ்
சேறுபடச் செறுவுழுநர் படைவாளின் செருச்செய்கை
திளைப்ப ரன்றே. (சுச)

85 திரையாடை யரையுடுக்குந் தரையாடன் மார்பகமாஞ்
செய்யிற் பல்வே
றுரையாருங் கமழ்களபத் தொளியெனவே சமைந்ததொளி
யுறைந்த போழ்தே
நிரையாரு நவமணிக்குப் பைகள்பரப்பி யழகுபெற
நிறைத்த தேய்ப்ப
விரையாரும் பழுதுபடா வித்தினையாங் கிருதிறத்தால்
வித்தி னாரே. (சுரு)

[பி-ம்.] [1]பாலமுத, பா.

86 மொய்தவா வுழவர்முது குடிப்பிறந்தோர் தமக்கமைத்த
முயற்சி யான்முன்
செய்தவான் பொருளிருந்து திபம்பயப்ப தெவனெனவே
சிதையாச் செல்வ
மெய்தவா னவர்மறையோர் குரவரொடுந் துப்புரவொன்
றிலர்பான் முன்னிப்
பெய்தவா றெனத்தழைநாற் றினைப்பறித்துக் கழனிதொறும்
பெய்திட் டாரே. (௬௬)

87 மைவளையுங் குவளைவிழிக் கடைசியர்பொன் மலைசுமந்து
மருங்கு லாய
மெய்வளையுந் திறத்தினிற்றம் மெய்வளையும் படிநடுதன்
மேய காலைக்
கைவளையு மிதித்தெழச்சூல் கால்வளையுங் கதறுமவை
கைக்கு நண்பூண்
பெய்வளையார் திறத்திலவோ செய்நன்றி யறிவதென்னும்
பெற்றித் தாமே. (௬௭)

88 கடைகுழையு மிளநாற்றை முடிகுழைய வகிர்ந்துதொளி
கலக்கி வாசத்
தொடைகுழையச் சுருளோதிப் பிடர்குழையக் களபமுலைச்
சுவடு தாங்கி
யிடைகுழைய நடைகுழையக் கடைசியர்தா நண்பரிணை
விழியோ டுள்ளப்
படைகுழைய மழலைமொழிக் குரவையெழீஇக் கழனிதொறும்
பாரித் தாரே. (௬௮)

89 நலந்தலைப்பட் டிடுமிளைய கடைசியர்கள் கவிழ்ந்துநடுந்
தோறும் யாழின்
குலந்தலைப்பட் டிடமுழக்குங் குரவையினுக் கிணைகூறிற்
கொழுநர் கூடி
யலந்தலைப்பட் டிடவுழுத புண்பாட்டைப் பொறுத்தியென
வவனி மாதை
வலந்தலைப்பட் டிதழறுகின் காப்பணிந்து பணிந்தேத்தும்
வாய்மை போலும். (௬௯)

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1931-ம்௵ ஆகஸ்டுமாத வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1931 ஆகஸ்டு | | | வரவு 1930 ஆகஸ்டு | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION : | | | | | | |
| (1) நன்கொடைவகையில் வரவு. | 1000 | ... | ... | | | |
| (2) மாதச்சந்தாவகையில் வரவு... | 150 | ... | ... | | | |
| (3) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 625 | 4 | ... | | | |
| (4) சங்கக்காலிவிடத்துக்கு மாத வாடகைவரவு ... | 28 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 1803 | 4 | ... | 1190 | 4 | 4 |

| விவரம் | செலவு 1931 ஆகஸ்டு | | | செலவு 1930 ஆகஸ்டு | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION : | | | | | | |
| (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 128 | 2 | 7 | | | |
| (2) சங்கக் கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது. ... | 96 | 7 | 2 | | | |
| (4) Stationery, contingencies வகையிற் செலவு ... | 4 | 1 | ... | | | |
| மொத்தம் ரூ | 355 | 10 | 9 | 392 | 2 | 9 |

| II Editorial Section : | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிட மிருந்து சந்தாவகையில் வரவு. | 18 | 8 | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக் குச்சந்தாவகையில்வரவு ... | 18 | ... | ... | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 80 | 9 | ... | | | |
| (4) செந்தமிழ்ப் பழைய பிரதிகள் விற்றவகையில் வரவு... | ... | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 117 | 9 | ... | 160 | 11 | ... |

| II Editorial Section : | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 8 | 13 | ... | | | |
| (3) ஷை சம்பந்தமாக அச்சுக் கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 71 | ... | ... | | | |
| (4) தபால் தந்திவகையிற் செலவு | 11 | 8 | 3 | | | |
| மொத்தம் ரூ ... | 126 | 5 | 3 | 125 | 3 | ... |

| III Press Section : | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலிவகையில் வரவு. | 56 | 12 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரயம் வரவு ... | 3 | 8 | ... | | | |
| (3) பைண்டிங் கூலிவகையில் வரவு ... | 67 | 9 | ... | | | |
| (4) Miscellaneous வரவு ... | 1 | 6 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 129 | 3 | ... | 179 | 3 | ... |

| III Press Section : | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 111 | 9 | 7 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery contingencies வகையிற் செலவு. | 13 | 4 | 3 | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது .. | 29 | 11 | 10 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 4 | 12 | 6 | | | |
| மொத்தம் ரூ. ... | 159 | 6 | 2 | 195 | 8 | 2 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 2050 | ... | ... | 1530 | 2 | 4 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ. ... | 13687 | 7 | 8 | 8069 | 12 | 2 |
| ஆகமொத்தம் ரூ. ... | 15737 | 7 | 8 | 9599 | 14 | 6 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ. | 641 | 6 | 2 | 712 | 13 | 11 |
| மாதமுடிவில் மீதியிருப்புத் தொகை ரூ. ... | *15096 | 1 | 6 | 8887 | ... | 7 |
| ஆக மொத்தம் ரூ. ... | 15737 | 7 | 8 | 9599 | 14 | 6 |

*By M. U. C. C. S.
Pass Bk. Rs. 5000- 0- 0
M.R.C.C. Bank
Pass Bk. Rs. 9406-15- 8
Cash on hand Rs. 689- 1-10

15096- 1- 6

*Audited and found correct.*

V. S. RAMASWAMI,

AUDITOR.

6—11—1931.

LAKSHMINARAYANAN,

*Manager*,

MADURA TAMIL SANGAM.

5—9—1931.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1931-௵ செப்டம்பர்மாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1931 செப்டம்பர் | | | வரவு 1930 செப்டம்பர் | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) நன்கொடைவகையில் வரவு... | 1000 | ... | ... | | | |
| (2) மாதச்சந்தா வகையில் வரவு ... | 70 | ... | ... | | | |
| (3) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 74 | 7 | 10 | | | |
| (4) சங்கக்காலியிடத்துக்கு மாத வாடகை வரவு ... | 28 | ... | ... | | | |
| (5) Miscellaneous வரவு ... | 1 | 4 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 1173 | 11 | 10 | 772 | 5 | ... |

| விவரம். | செலவு 1931 செப்டம்பர் | | | செலவு 1930 செப்டம்பர் | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 129 | 6 | 5 | | | |
| (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது ... | 100 | 8 | 9 | | | |
| (4) Stationery contingencies வகையிற்செலவு ... | 3 | 4 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II Editorial Section: | | | | | | |
| (1) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச் சந்தாவகையில் வரவு ... | 12 | 2 | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 59 | 2 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 71 | 4 | ... | 157 | 6 | 6 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (5) தபால், தந்திவகையிற் செலவு | ... | 8 | ... | | | |
| (6) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு. | 7 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ...: | 367 | 11 | 2 | 381 | 14 | 6 |
| II Editorial Section: | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 25 | 15 | 6 | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 73 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **III Press Section:** | | | | | | |
| (1) அச்சுக்கூலி வகையில் வரவு ... | 89 | 12 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரயம் வரவு ... | 30 | 2 | ... | | | |
| (3) பைண்டிங்கூலி வகையில் வரவு ... | 15 | 10 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 135 | 8 | ... | 101 | 7 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) தபால், தந்திவகையிற் செலவானது. ... | 10 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 109 | 7 | 6 | 85 | 13 | 3 |
| **III Press Section:** | | | | | | |
| (1) அச்சாபீஸ்சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 101 | 4 | 5 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 53 | 11 | 9 | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது | 31 | 5 | 8 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு | 10 | 13 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 197 | 2 | 10 | 203 | 4 | 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 1380 | 7 | 10 | 1031 | 2 | 6 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ ... | 15096 | 1 | 6 | 8887 | ... | 7 |
| ஆகமொத்தம் ரூ ... | 16476 | 9 | 4 | 9918 | 3 | 1 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 674 | 5 | 6 | 671 | ... | 5 |
| மாத முடிவில் மீதி இருப்புத் தொகை ரூ ... | *15802 | 3 | 10 | 9247 | 2 | 8 |
| ஆகமொத்தம் ரூ ... | 16476 | 9 | 4 | 9918 | 3 | 1 |

*By M. U. C. C. S. Pass Book Rs. 5000- 0- 0

M. R. C. C. Bank Pass Book Rs.10456-15- 8

Cash on hand Rs. 345- 4- 2

15802- 3-10

*Audited and found correct,*

V. S. RAMASWAMI,

AUDITOR,

6—11—31.

LAKSHMINARAYANAN,

*Manager,*

MADURA TAMIL SANGAM.

5—10—1931.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| *7. | தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| * | சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் ... ... | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கணூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலை நூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 2 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | | | |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | 0 | 4 | 0 |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 2 | 0 |
| 14. | மூத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 12 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 4 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் ... ... ... | 0 | 3 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 2 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 8 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | | | |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா ... ... ... | 0 | 1 | 0 |
| 24. | குருமொழிவிஞ்விடை ... ... ... | 0 | 2 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை... ... | 0 | 1 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 8 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| 28.* | சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | 1 | 0 | 0 |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திரநூறுபாட்டுக்குரை ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் ... ... ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு ... ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:—1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச் சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச் சந்தா ரூ 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப் பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.